ஸரஸ்வதியையொத்த கல்வன்மையும், நன்மக்கட்பேறும் பெற்றுள்ள தமது பட்டமஹிஷியின் மேம்பாடுகளும் தேவரீரது கீர்த்திக்குத்தக்க காரணங்களாகும். மேலும் "அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை இருள்சேர்ந்த இன்னா உலகம் புகல்" என்பது பொய் போமோ?

**வீரவர்மா:—** நண்பர்களே! நல்லமைச்சர் இல்லாத அரசு அழியுமன்றோ! தம்மைப்போன்ற நன் மந்திரிகளின் ஸமயோசித புத்திமதிகளே இதுகாறும் என் பெருமைக்கு உண்மையான காரணமாகும். காலமும், இடமும், நம்வலியும் மாற்றான் வலியும் அறிந்து அறிவுறுத்தும் நும்போன்ற மந்திரிகள் இல்லாத அரசு அச்சாணியில்லாத சகடம்போல் கவிழ்ந்தழியுமன்றோ. "கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் மாண்டதமைச்சு" என்பதை நான் அறிவேன்.

**லோசனா:—** நாதா! கணவனே தெய்வம் என்பதும், அவனது நற்போதனைகளைக் கேட்பதே வேதஸ்ரவணம் என்பதும், அவனுக்கு வேண்டிய சைத்யோபசாரங்களைச் செய்வதே ஈச்வரனுக்குச் செய்யும் வழிபாடு என்பதும் இவ்வுலகில் உத்தம குணங்கள் அமையப்பெற்ற நன் மங்கையர் பலரும் அறியாதவைகளோ?

கற்புறு சிந்தைமாதர் கணவரையன்றிவேறோர்
இற்புறத்தவரை நாடார் அறங்களும் இன்ப வாழ்வும்
தற்பொறியாக நல்கும் தலைவ! நின்னலதோர் தெய்வம்
பொற்புறக்கருதோம் கண்டாய் பூரணனந்த வாழ்வே!
(குறள் வெண் செந்துறை.)

நிற்க, நமது குழந்தைகளைக் கல்வி கேள்விகளிற் றேர்ந்தவர்களாகச்செய்ய ஏற்பாடு செய்யவேண்டுமென்பதை மிகவும் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஸாயஞ:— அரசே! நம்ம பிள்ளிங்க படிக்குமா? வித்தை வாணவித்தைதான். சோத்துக்குப்பறந்தாலல்லொ படிக்கும்; கவலையிருக்கும்.

வீரவர்மா:— விதூஷகா! எல்லாம் கடவுள் செயலே! பிரியே! நம்மக்கள் பள்ளிக்கு அனுப்பப்படவேண்டிய பருவம் அடைந்தனர் என்பது உண்மையே. அவர்கள் ஒரு தக்க ஆசானிடம் ஒப்புவிக்கப்பட்டால் வளர்பிறை மதியமே போன்று கல்வியிற் சிறந்து விளங்குவார்கள். கல்வியின் பெருமையையும் அதன் அவசியத்தையும் நான் அறிவேன். கல்வி, அதைப்பெற்ற ஒருவனுக்கு இம்மை மறுமைப்பயன்களை அளிக்கும். அது அவனது அறியாமையை நீக்கி அவனுக்குப் பெருமையைக்கொடுக்கும். பிறருக்கு அதைக் கொடுத்தாலும் குறையாது கல்வியறிவைப் பெற்ற ஒருவன் தனக்கு வரும் கஷ்ட சுகங்களை முன்னர் அறிந்துகொண்டு தக்க எச்சரிக்கையுடன் இருந்து கீர்த்தி பெறுவான். அதுபற்றியே

இம்மை பயக்குமால் ஈயக்குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாம் காணேம் கல்விபோல்
மம்மா றுக்கும் மருந்து. (நாலடியார்)
என்றார் பிறரும்.

லோசஞ:— நாதா! நமது செல்வச் சிரஞ்சீவிகளும் கண்மணி குணமாலிகாவும், வாகனப்பயிற்சிகளும், படைக்கலப் பயிற்சிகளும், சாஸ்திரப் பயிற்சிகளும் சிறக்கப் பெற்றுக கலை வல்லர்களாய் விளங்கவேண்டுமென்பது எனது விருப்பம். கல்வியே ஒருவனுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்ற சதுர்வித புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லது. அதுபற்றியே குமர குருபரஸ்வாமிகளும்,

அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்று
உற்றுழியும் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க்குற்ற துணை. (நீதிநெறி விளக்கம்)

என்று திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

**ஸுபுத்தி:**— (கண்டகரைப்பார்த்து) கண்டகரே! நமது ராஜகுமாரி குணமாலிகாவுக்கு வயது ஒன்பது. அவள் இது காறும் ஏன் கல்விக்கழகத்துக்கு அனுப்பப்படவில்லையோ? ஒருக்கால் நமது அரசர் அப்பெண்மணிக்குக் கல்வியறிவு வேண்டாமென்றும் உலகியலறிவே போதுமென்றும் கருதினர் போலும்!

**கண்டகர்:**— (ஸுபுத்தியை நோக்கி) நண்பரே! பெண்பாலரும் ஆண் மக்களைப்போலவே கல்வியறிவு ஒழுக்கங்களிற் சிறந்து விளங்கவேண்டுமென்பது மிகவும் அவசியம் என்பதையும் இன்றேல் பெண் மக்கள் பெரிதும் தம் கடமைகளை மறந்து தம் நலத்திற்கேபாடுபடும் பாங்குடையவர்களாக மாறிப் பிறர் நலத்தைச் சிறிதும் கருதாதவர்கள் ஆவார்கள் என்பதையும் நாம் நம் அரசர்க்கு வற்புறுத்திச் சொல்லவேண்டும். தவிரவும் கல்வியறிவிற் சிறந்த ஒரு தாய் தன் மக்களை ராஜதர்மம், உலகதர்மம், சாஸ்திர ஆராய்ச்சி இவற்றில் சிறந்து விளங்கச் செய்வாளன்றோ! பெற்ற தாயே யாயினும் அவள் தனது மக்களுள் அறிவுடைய ஒருவனையே விரும்புவாள். இதுபற்றியே பாண்டியன் நெடுஞ்செழியனும் "பிறப்போரன்ன உடன் வயிற்றுள்ளும், சிறப்பின் பாலால்தாயும் மனந்திரியும்" என்று கூறியுள்ளார் போலும்!

**வீரவர்மா:**— மந்திரிகளே! ஒரு தந்தைக்குத் தனது மக்களுள் ஆண் பெண் என்ற மாறுபாடு கொண்டு ஒருவர் நலத்தை அதிகங் கருதியும் மற்றொருவர் மேன்மையை

அறவே மறந்தும் இருக்க இயலுமா? ஆண் மக்களாயினும் பெண்மக்களாயினும் பெற்றோர்களுக்கு இருவர் மாட்டும் ஒரேவித அன்பே தோன்றும். குணமாலிகா அவளது பெயருக்குத் தக்கபடி குண விசேஷங்கள் நிரம்பப் பெற்று விளங்குகின்றமையால் அவளையும், நமது குழந்தைகள் ஜெகன்மோகன், புண்யபாலன் இவர்களோடு சேர்த்துக் கல்வி பயிலச்செய்யவேண்டுமென்றே தீர்மானித்திருக்கிறேன். ஆதலால் நமது குழந்தைகளுக்குப் பல துறைகளிலும் அறிவுறுத்தி அவர்களைச் சிறந்து விளங்கும்படி செய்யக்கூடிய ஆசானொருவனைத் தாங்கள் அறிந்து சொல்ல வேண்டும். நமது மக்களுக்குக் கல்விச்செல்வம் பொருட்செல்வம் அருட்செல்வம் இவற்றை நாம் அளிக்கவேண்டும். கல்விச் செல்வம் அழிவற்றது. அதையே உறுதுணையாக் கொண்டு பின்னையதிரண்டினையும் நம்மக்கள் பெற வேண்டும். அம்மம்ம! கல்வியின் பெருமை சொல்லும் தகைமைத்தோ?

வெள்ளத்தே போகாது வெந்தணலால் வேகாது
வேந்தராலும்
கொள்ளத்தான் முடியாது கொடுத்தாலும் நிறைவின்றிக்
குறைபடாது
கள்ளர்க்கு மிக அரிது, காவலோ மிக எளிது கல்வி என்னும்
உள்ளத்தே பொருளிருக்க உலகெல்லாம் பொருள்தேடி
உழல்வதென்னே?

(விவேக சிந்தாமணி)

ஸோமயாஜு:— கழுதைபோல மூட்டை தூக்குவதுதான் மிச்சம். வாத்திக்கு பணந்தான் பிள்ளைக்கு அடிதான். எவனுக்கோ வேட்டை?

ஜேகன் மோகன்:— தங்காய்! தம்பி புண்யபாலனும் என்னுடன் சேர்ந்து கல்வி பயில வருவானோ? அவனை அரைக்கணமும் பிரிந்திரேன் அண்ணு!

வீரவர்மா:— குழந்தாய்! உத்தம அன்புள்ள சகோதரர் அப்படித்தான் உணர்வர். நீங்கள் மூவரும் சேர்ந்து கல்வி பயில வேண்டுமென்பது தான் எனது விருப்பம். நீங்கள் தேனும் பாலும்போலவும் மலரும் மணமும் போலவும் ஒற்று நடக்கவேண்டும்.

புண்யபாலன்:— அப்பா நான் எப்பொழுதும் உபாத்தியாயர் வீட்டிலேயே இருக்கவேண்டுமோ? நான் அன்னையையும் தங்கையும் எப்படிப் பிரிந்திருப்பேன்?

லோசனு:— குழந்தாய்! இதுவே உனக்கு விசாரமற்ற காலம். "சிறுவர்க்குக் கல்வி சிலையில் எழுத்து" என்றபடி இச்சிறு வயதிலேயே நீ சந்தோஷமாய் உன் தமயன் தமக்கை முதலானவர்களோடு பல அரிய விஷயங்களைக் கற்றுக் கெட்டிக் காரனுகவேண்டும். தவிரவும் நீ எப்பொழுதும் ஆசான் வீட்டிலேயே இருந்து அவனுக்குப்பணி விடைகள் புரிந்து கருத்துடன் கல்வி கற்றுச் சிறந்து விளங்க வேண்டும்.

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"

என்று பாண்டியன் நெடுஞ்செழியன் திருவாய் மலர்ந்தருளியுள்ளதையும், முதுமொழிக்காஞ்சி தண்டாப்பத்திற் கூறியுள்ள 'கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்' என்ற அருள் வாக்கையும் நீங்கள் கனவிலும் மறக்கக் கூடாது.

வீரவர்மா:— ஜெகன் மோகனு! கூடிய சீக்கிரம் உன்னையும் உன் தம்பியையும், உன் தமக்கை குணமாலிகாவையும்,

ஓர் உத்தம குணமும் நிறைந்த கல்வியுமுள்ள ஆசானொருவனிடம் அனுப்பப் போகிறேன். அமைச்சர்கள் அபிப்பிராயம் யாதாயிருக்கலாமோ? "கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்". கல்வியறிவைப் பெறாத ஒருவனது கண்கள் புண்களேயாகும். அவனால் உலகத்தாரோடு ஒற்று ஒழுக ஒருநாளும் முடியாது.

ஸுபுத்தி:— அரசே! தேவரீரது முதற் புதல்வன் இந்த ஜெகன் மோகன். இவனே தமது ராஜ்யபாரத்தை ஏற்றுக் கொள்ளவேண்டியவன். தக்க கல்வியின்றி அந்த பாரத்தை அவனால் எவ்வாறு சுமக்கமுடியும்? அப்பதவிக்கு ஏற்ற குணங்களும் திறனும் கல்வியறிவும் பெறாத ஒருவன் அதற்குத் தகுதியுடையவனாவனோ? கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து விளங்காத ஒருவன் அரசபதவியைப்பெற்றால், அது ஒரு வெறிகொண்ட குரங்கு கையிற் கொள்ளிகொண்டது போலாகும்.

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்தூறும் அறிவு"

என்ற திருவள்ளுவர் வாக்கிற்கிணங்க மாந்தர்க்குக் கற்கக் கற்கவே அறிவு ஊறும் என்பது திண்ணம்.

ஜெகன் மோகன் :— தந்தாய்! நான் கருத்துடன் கற்று தங்களை மகிழ்விக்கின்றேன்.

குணமாலிகா:— அண்ணா! நான் கல்வி நலம்பெற விரும்புகின்றேன். என்னையும் தயை செய்து ஜெகன்மோகன், புண்யபாலன் இவர்களோடு சேர்த்து குருமுகமாய்க் கல்வி கற்றுத் தேர்ச்சிபெறும்படி ஆசீர்வதித்து அனுப்புங்கள். கல்வியறிவைப்பெறாத மாந்தர் விலங்குக் கொப்பாவர் என்பதை நான் கேள்வியுற்றது முதல் நான் கல்லாதவளாகையால் என் மனம் நாணமடைகின்றது.

வீரவர்மா:— குணமாலிகா! உன் நுண்ணறிவு எத்தகைமைத்து என்பது எனக்குத் தெரியும். உன் விருப்பப்படியே ஏற்பாடு செய்கின்றேன். நானும் உன் அன்னையும் அவ்விதமே செய்ய நாட்டமுள்ளவர்களாய் இருக்கின்றோம். மந்திரிகளின் அபிப்பிராயமும் அதுவேயாகும். நல்லது! கண்மணீ!! சற்று நேரம் தம்பியும் நீயும் விளையாடிக்கொண்டிருங்கள். முதலில் நீ அப்பைங்கிளிக்குச் சிறிது பழமூட்டு. மந்திரிகாள்! நமக்குத் தெரிந்தமட்டில் நம் நாட்டிலோ வேறு பிற நாட்டிலோ தெய்வபக்தியும், கல்வியில் தெளிவும், கட்டுரைவன்மையும், படைக்கலத் தேர்ச்சியும், உலகியலறிவும், உயர் குடிப்பிறப்பும் ஒருங்கே யமைந்துள்ள உத்தம ஆசிரியர் எவரேனும் உளரோ?

ஸுபுத்தி:— அரசரேறே! பாஞ்சால நாட்டில் ஒரு அமாத்ய பிராமண குலத்திற்றோன்றியுள்ள ஆத்மானந்தர் என்ற பெரியார் தம்முடைய கல்விவன்மையால் சிறந்த கீர்த்தியுடன் விளங்காநிற்கின்றார். அவர் மலை, மலை, நிலம், நிறைகோல் இவற்றின் தன்மை வாய்ந்தவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவர் நம்மக்களுக்குச் சிறந்த ஆசிரியராவர். இதைப்பற்றி நண்பர் கண்டகர் அபிப்பிராயம் என்னவோ?

கண்டகர்:— அரசே! ஆத்மானந்தருக்குச் சமானமான ஆசிரியர் ஆத்மானந்தரே. ஏனெனில் அவரை ஒப்பாரும் மிக்காரும் இலர். ஆசிரியரின் திறன் கவனிக்கத்தக்கதேயாயினும் கற்கும் மாணவர்களும் தங் கடமை உணர்ந்தவர்களாய் இருத்தல் வேண்டும். அகத்தில் விருப்பமும், ஆக்கத்தில் ஆசையும், உல்லாசப் பேச்சும், ஊணிற்சுவையும் உள்ள மாணவர் கல்வித் தேர்ச்சி பெறுதல் சிரமம். "நுண் மாணுழை புலமில்லான் எழில்நலம் மண் மாண்புனைபாவை யற்று" என்ற தெய்வப் புலமைவாய்ந்த திருவள்ளுவநாயனார்

வாக்கிற்கிணங்க சிறந்த நுட்பமான அறிவை, தக்க முறையில் பெறாத ஒருவனுடைய வனப்பு, மண்ணாற் செய்து வர்ணம் பூசி, அலங்கரித்து வைக்கப்பட்டிருக்கிற ஒரு பாவையின் அழகுக்குச் சமானமாகும். ஆகையால் நம் சிறுவர்களுக்கு நற்புத்தி புகட்டி அவர்களை ஆத்மானந்தரிடம் சேர்ப்பிப்பதே நமது கடமையாகும்.

**ஜெகன்மோகன்:—** அண்ணா! நாங்கள் இந்திராதி போகங்களை இங்கு நுகர்ந்தவர்களேயாயினும், ஆசான் சொற்படி அடங்கி நடந்து அன்னம், ஆ இவற்றின் தன்மைகளைப்பெற்று உத்தம மாணாக்கர்களுக்குரிய சீரிய குணங்களோடு கல்வி கற்கின்றோம்.

வீரவர்மா:— ஜெகன் மோகனா! நீயே சத்புத்திரன். உன் சொல் கேட்டு மகிழ்ந்தேன். உன்னை நல்லவன் என்றும், அறிவாளி என்றும், உலகத்தார் எண்ணும்படி நன்றாய்க்கற்று அதற்குத்தக்கபடி நடந்துகொள்ளவும் வேண்டும். இதுபற்றியே "கற்கக் கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்றார் பிறரும்.

புண்யபாலன்:— தந்தையே! கூழாயினும் களிப்புடன் உண்கின்றோம். ஆசான் எது சொல்லினும் அனைத்தும் எமது நலத்துக்கே எனக்கருதி அவர் தம் ஆணைகளை எம் சிரத்தால் வகித்து அங்ஙனமே செய்கின்றோம்.

வீரவர்மா:— குழந்தாய்! நல்லது. அதுவே சரி.

குணமாலிகா:— அண்ணா! நான் புகல்வது மிகையாகுமோவென அஞ்சுகின்றேன். என் சகோதரர்களினும் பதின்மடங்கு அதிக ஆர்வமுடன் நான் கற்றுத் தேர்ச்சியடைகின்றேன். எனது ஆசிரியரிடம் வெகு ஜாக்கிரதை

யோடும் பக்தி சிரத்தை விச்வாஸத்தோடும் நடந்து கொள்கிறேன். தவிரவும்,

அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி
நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமோடு
எத்திறத்தாசானு வக்கும் அத்திறம்
அறத்திற்றிரியாப் படர்ச்சி வழிபாடே.

என்ற பவணந்தி முனிவர் திருவாய் மலர்ந்தருளியுள்ள மாணாக்கர் கடமைகள் சில நான் சிறிது அறிவேன். "காமுற்ற பெண்ணுக்கு அணிகலம் நாணுடைமை" என்பதும் "நாய் போல் உழைத்தால் அரசன்போல் வாழலாம்" என்பதும் நான் தெரிந்துகொண்டுள்ள முதுமொழிகளன்றோ? ஆகலால் ஆசானிடம் முறையறிந்து கற்று அவரது அனுக்கிரகத்தைப்பெற்று கல்வி கேள்விகளில் நிரம்பினவளாய்த் தமது திருமுன் நின்று என்னுடைய வந்தனங்களைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

வீரவர்மா:— மந்திரி கண்டகரே! அப்பாஞ்சால நாட்டு ஆசிரியர் ஆத்மானந்தரை, தூதர் மூலம் செய்தியனுப்பி இவண் வருவிப்பீர்களாக.

கண்டகர்:— பூபதியே! அங்ஙனமே செய்கின்றேன். இதோ நமது தூதன் வாயுவேகனை அனுப்புகின்றேன். (வாயுவேகனை நோக்கி) வாயுவேகா! நீ பாஞ்சாலம் சென்று ஆசிரியர் ஆத்மானந்தரை நமது அரசன் காண விரும்புவதாக அறிவி. கூடுமானால் உடன் அவரை அழைத்து வருவாயாக.

வாயுவேகன்:— அமாத்யரே! தமது ஆணை, சிரமேற்கொண்டேன். நாளை மாலை இவண்மீள்வேன். அரசே! விடைபெற்றுக்கொள்கின்றேன்.

# முதல் அங்கம்—இரண்டாங்காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:—

வாயுவேகன், விராட தேசாதிபதி தூதன்; ஆத்மானந்தர் ஆசிரியர்; ஸுபுத்தி, கண்டகர் மந்திரிகள்; வீரவர்மா விராட தேசாதிபதி.

இடம்:— பாஞ்சாலதேசத்தில் ஆத்மானந்தர் பர்ணசாலை.

காலம்:— பிற்பகல்.

சூரிய காந்தக்கல் லினிடத்தே செய்ய சுடர் தோன்றி
யிடச்சோதி தோன்றுமாபோல்
ஆரியனும் ஆசான்வந்தருளால் தோன்ற வடிஞானம்
ஆன்மாவில் தோன்றும் தோன்றும்
தூரியனும் சிவந்தோன்றும் தானும் தோன்றும்
தொல்லுலகமெல்லாந் தன்னுள்ளே தோன்றும்
நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை எல்லாமு நிகழ்ந்து தோன்றும்.

(சிவஞானசித்தியார் சூத், 8 பா. 28.)

(வாயுவேகன் ஆசிரியர் ஆத்மானந்தரைப் பாஞ்சாலம் சென்று கண்டு உரையாடல்) ஆத்மானந்தரே! நான் விராட தேசாதிபதி தூதன். அவர் ஆணைப்படித் தமது நாடு வந்தேன். அவ்வரசர் தமது செல்வக் குழந்தைகளைத் தம்மோடு சேர்த்து அனுப்பி அவர்களைக் கல்வியிற் சிறந்த அறிவாளிகளாகச் செய்யவேண்டுமென்ற விருப்பம் கொண்டுள்ளார். உடன் போந்தருள்க.

**ஆத்மானந்தர்:—** தூதரே! உமது வரவு நல்வர வாகுக. நமது அரசர்க்கும் அவரது நாட்டிற்கும் ஸர்வ மங்களங்களும் உண்டாகுக. "தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி நன்றி பயப்பதாந்தூது" என்ற திரு வாக்குக்கிணங்க ஒரு உத்தம குணமுள்ள தூதனுக்குரிய சீரிய குணங்கள் யாவும் ஒருங்கே தம்மிடம் இயற்கையில் அமையப்பெற்றிருக்கின்றன. தங்களைத் தூதனைப்பெற்ற அரசனது பாக்கியமே பாக்கியம், இதோ தமது விருப் பப்படி உடன் வருகின்றேன்.

**வாயுவேகன்:—** ஆசிரிய சிரேஷ்டரே! தாம் அன்பு மிகுதியால் என்னைப்புகழ்ந்து கூறியனயாவும் பெரிதும் புகழுரையே. ஒருக்கால் என்னிடம் குணம் சிலாகிக்கத் தக்கனவாய் சில இருப்பின் அவையும் தம்போன்ற பெரியார் களின் அனுக்ரஹ விசேஷத்தால் அமைந்தனவாயிருக்கலாம். இதோ இந்த ரதத்தில் ஏறிக்கொள்ளும். இக்குதிரைகள் வாயுவேகத்தையும் மனோ வேகத்தையும் பின்னடையச் செய்யும்படியான பெருமை வாய்ந்தவை. (ஆத்மானந்தரை ஏற்றிக்கொண்டு வாயுவேகன் விராட தேசம் சேர்கின்றான்).

---

## முதல் அங்கம்—மூன்றாங்காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:—

ஆத்மானந்தர் பாஞ்சால ஆசிரியர்; வீரவர்மா விராட தேசாதிபதி; ஸுபுத்தி, கண்டகர், மந்திரிகள்; ஸாயஞ விதூஷகன்; லோசனு வீரவர்மா மனைவி; குணமாலிகா ஜெகன்மோகன், புண்யபாலன் குருகுலவாஸிகள்,

இடம்:— வீரவர்மா அரண்மனை.

காலம்:— முற்பகல்.

அருள்பழுத்த பழச்சுவையே! கரும்பே! தேனே!
ஆரமிர்தே! என் கண்ணே! அரியவான
பொருளனைத்தும் தரும்பொருளே! கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே! புனிதவாழ்வே!
கருதரிய கருத்தகனுள் கருத்தாய் மேவிக்
காலமுந் தேசமும் வகுத்துக்கருவியாதி
விரிவினையுங்கூட்டி உயிர்த்திரளை ஆட்டும்
விழுப்பொருளே! யான் சொல்லும் விண்ணப்பங்
கேளே.

(தாயுமானவர் பாட்டு.)

வீரவர்மா:— சென்ற வாயுவேகன் இன்னும் மீண்டானில்லை. ஆத்மானந்தரைக்கண்டனனோ இல்லையோ? துறவிக்கு வேந்தன் துரும்பு" என்றபடி அவ்வாசிரியர் பெருமான் எனது வேண்டுகோளுக்கிசைந்தனரோ அல்லது மறுத்தனரோ?

(வீரவர்மா, ஆத்மானந்தர், வாயுவேகன் இருவரும் வருவது கண்டு சிம்மாஸனத்தினின்றும் எழுந்து நின்று அவர்களை வரவேற்கின்றான்.)

ஆத்மானந்தர்:— விராடபதியே! நுமது நாடு எல்லா வளங்களிலும் சிறந்து விளங்குக. தாமும், தமது இல்லத்துணையும், மக்களும் நீடூழி வாழ்க. தங்களுக்கு ஸர்வ மங்களங்களும் பெருகுக.

வீரவர்மா:— அந்தணர் பெருமானே! ஆசிரியர் திலகமே!! இவ்வுயரிய ஆசனத்தில் வீற்றருள்க. நுமது வரவு நல்வரவாருக. எமது குலம் நுமது வரவால் பெருமையடைக. எனது செல்வக்குழந்தைகள் ராஜரீகத்திற்கு ஏற்ற கல்வி, அறிவு ஒழுக்கங்களைப்பெறவேண்டுமென்பது எனது விருப்பம். அம்மனோரதத்தை ஈடேற்றிவைக்க வேண்டியது உமது கடன். தேவரீர் என் குழந்தைகளைப் பல துறைகளிலும் பயில்வித்து அறிவாளிகளாகவும் ராஜ்யபாரத்தை வகிக்கக் கூடிய சக்தியுள்ளவர்களாகவும் தயாரித்து உதவி புரியும்படி மிகவும் பரிந்து வேண்டிக்கொள்கின்றேன்.

ஆத்மானந்தர்.— மண்டலாதிபதியே! ஈண்டு என்னை நானே புகழ்ந்து பேசிக்கொள்வது தற்புகழ்ச்சியாகாது. சிறிது கூறுவேன். குற்றமுளதேல் பொறுத்தருள்மின். "உள்ள முடைமை உடைமை பொருளுடைமை நில்லாது நீங்கிவிடும்." செல்வம் சகடக்கால் போலும். அது ஒருவர் மாட்டு நிலைத்து நிற்பதில்லை. ஆனால் ஊக்கமுடையவன் எந்நாளும் துன்பத்திற்குள்ளாகமாட்டான். ஆதலால் நான் தமது மக்களை கல்விகேள்விகளிற் சிறந்தவர்களாகவும், நல்ல ஊக்கமுள்ளவர்களாகவும் செய்ய முயல்கின்றேன். கடவுள் துணைபுரிவாராக!

ஸுபுத்தி:— அந்தணரே! எமது அரசர் நுமது பெருமை நன்கு அறிவார். சிறிது கூறினும் மிகையாகும் என்பது திண்ணம்.

கண்டகர்:— ஆசிரியரே! கடலாடை உடுத்த இவ்வுலகம் ஆத்மானந்தரது கல்விப் பெருமையை அறியுமென்றால் நமது மன்னர்பிரான் அதை அறியாரோ? நல்ல வார்த்தை சொன்னீர்.

வீரவர்மா:— அறிவிற்சிறந்த நண்பரே! நுமது திறமை யான் அறிவேன். இக்குழந்தைகள் நுமது அடைக்கலம். தாங்கள் இச்சிறுவர்களது துடுக்கடக்கி நிறைந்த அறிவும் உயர்குணங்கள் பலவும் பெற்றுச் சிறந்து விளங்கும்படி செய்வீர்களாக. நமது சக்ரவாகபுரம் ஜில்லாவின் வருஷ வருமானம் ரூ. 50000-த்தையும் தாமே இக்குழந்தைகளை ஸர்வ வித்யாபாரங்கதராய் விளங்கச் செய்வதற்கு ஓர் ஊதிய மாய்ப்பெற்று இன்றுமுதல் அவ்வுரிமையை அடைந்து களிப்பீர்களாக. இப்பொற்காசுகளையும், பூந்துகிலாடைகளை யும், பட்டு பீதாம்பரங்களையும் அன்புடன் ஏற்றுக்கொள்க. இம்மக்களை நும் மக்கள்போற் கருதி அவர்களை நல்வழிப் படுத்துக. இவ்வாவினங்களையும், தான்யப் பொதிகளையும், கொண்டு தம் இல்லம் சேர்மின். ஈசனருளால் எனது செல்வக்குழந்தைகள் நோயற்ற வாழ்வுடன் நிறைந்த அறி வைப்பெற்றுச் சுகித்திருப்பார்களாக.

ஸாயணு:— வாத்தியாரே! வாத்தியாரே!! உங்க பாடு ஷோக்குதான். எங்க வாத்தியாரு சம்பளம் கேட்டாரு. ஓடி யாந்துட்டேன். எங்க ஐயா படிப்பு வேண்டாம், ஆடு மேய் இண்ணுட்டாங்க.

ஆத்மானந்தர்:—நண்பா! எந்தத் தொழிலும் ஈனமான தன்று. ஸத்யமும், நன்னம்பிக்கையும் தொழிலிற் கருத் துங்கொண்டு விடாமுயற்சியுடன் பாடுபடுபவன் இவ்வுலக வாழ்க்கையின்பங்களைத் தட்டின்றி அடைவான். கல்வி நலனும் பொருந்தியிருந்தால், பொன் மலர் நறு மணம் பெற் றது போலாகும். ஆதலால் உன் நிலைமை தாழ்ந்தது என்று கனவிலும் கருதாதே. "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும்

தத்தம் கருமமே கட்டளைக்கல்'' என்னும் முதுமொழியை எந்நாளும் மறவாதே.

ஸாயணா:— ஆரியரே! நமஸ்காரம். இந்த நாக்குட்டி மேலே கொஞ்சம் தழவு இருக்கட்டும்.

லோசனா:— பெரியவரே! பெற்றமனம் பித்து என் பார்கள். இக்குழந்தைகள் பிணிகளால் இன்னலுறுது. காப்பீராக. சிறிது தவறி நடக்கினும் கண்டிப்பிற் கடுமையின்றி இன்சொல்லாடி அவர்களைத் திருத்த முயலவும். குழந்தைகள் வெய்யிலால் வாடாமலும் வாடையால் வருந்தாமலும் காப்பீராக. இவையே எனது தாழ்ந்த விண்ணப்பம். "நுணங்கிய கேள்வியரல்லார் வணங்கிய வாயினராதலரிது." எமது மக்கள் நுட்பமான கல்வியறிவையும் பெற்று, அறிவுடைய பெரியோர், தமது அனுபவ முதிர்ச்சியாற் சொல்லும் நற்போதனைகளையும் கேட்டு தாம் கற்றவாறும் கேட்டவாறும் உலகில் நடந்துகொள்ளக்கூடியவர்களாக ஆக வேண்டுமென்பதே எனது விருப்பம். அத்தகைய அறிவைப் பெறுதார் யாரிடத்திலும் வணங்கி மரியாதையாய்ப் பேசும் பழக்கத்தை பெறமாட்டார்கள்.

ஆத்மானந்தர்:— அறிவிற் சிறந்த நராதிபதியே! தமது தேவியின் விருப்பம் தகுதியுள்ளதே. நிற்க, கொடையிற் சிறந்த கர்ணனும் மாவலியும் நுமக்கு ஈடாவார்களோ? தமது தேவியின் நியமனப்படித்தமது செல்வச்சிறுவர்களை நடத்துகின்றேன். சாம, தான, பேத, தண்டமென்ற சதுர்வித உபாயங்களையும் தழுவி இம்மக்களை எவ்வாற்றானும் சிறந்தவர்களாகச் செய்ய முயல்கின்றேன். ஈசன் துணை புரிவாராக!

குணமாலிகா, ஜெகன்மோகன், புண்யபாலன் :— தந்தையே! நமஸ்கரிக்கின்றோம். அன்னையே! நமஸ்கரிக்கின்றோம். குருகுலவாஸஞ் செல்ல மனமுவந்து விடையளிப்பீர்களாக.

வீரவர்மா — லோசனு :— கண்மணிகளே! உங்களுக்கு ஸர்வ மங்களங்களும் உண்டாகக்கடவன. நீங்கள் உங்களுக்குள் சண்டை சச்சரவின்றி ஒற்றுமை இருக்கவேண்டும். நீங்கள் உங்கள் உபாத்தியாயரிடம் மரியாதையாய் நடந்து அவரது ஆஞ்ஞைக்கு அடங்கி நடக்க வேண்டும். மற்ற உங்கள் பாடசாலைச் சிறுவர்களோடு சண்டையிடாமல் பழக வேண்டும். பாடம் போற்றல், கேட்டவை நினைத்தல், ஆசாற் சார்ந்தவை அமைவரக்கேட்டல், அம்மாண் புடையார் தம்மொடு பயிறல், வினுதல், வினுயவை விடுத்தல் இவற்றை உங்கள் கடைமைகளாகக் கொள்ளவேண்டும். தவிரவும் "மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை" "சாவாமற் கற்பதே கல்வி" என்ற அரிய கட்டுரைகளை நீங்கள் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்

ஸாயனு :— எங்க ஆயா வெறெ பாடங்கத்துக்கொடுத்திருக்காங்க. கண்ணெ புட்டுக்கிட்டதும் கொல்லைக்காடு சுத்துவேன். ஒவ்வொரு வீட்டுத்திண்ணெயா பேக்குந்துவேன். உருமநேரத்துக்கு ஊட்டுக்குப் போவேன். ஆடுமாடு பல் விளக்கினுலும் நான் பல் வௌக்க மாட்டேன். என் உடம்பு தண்ணிகண்டு ஆறுமாசம் இருக்கும். போரவங்க வரவங்களையெல்லாம் சண்டைக்கிழுப்பேன். அடிப்பேன். அடிச்சா பட்டுப்பேன்.

குணமாலிகா—ஜெகன்மோகன்—புண்யபாலன் :— அன்னாய்! இவன் என்ன பித்தனு? அல்லது பேயனு? நாங்கள் இவனைப்போல் ஒரு நாளும் செய்ய மாட்டோம்.

லோசனை.— செல்வக் குழந்தைகளே! இது துஷ்டர்களுடைய குணம். இதைக்கனவிலும் நினைக்காதீர்கள். இக்குணத்தினால் இவ்வுலகில் துஷ்டன் என்ற அவச்சொல்லும் மறுமையில் கொடிய நரகத்துன்பமுந்தான் சம்பவிக்கும்.

குணமாலிகா:— அன்னையே! தம் விருப்பப்படியே நடக்கின்றோம். எங்களைப்பற்றிக் கவலையே வேண்டாம். எங்களுக்கு இன்று முதல் தாயும், தந்தையும் தெய்வமும் எமது ஆசிரியரே. நாங்கள் போய்வருகின்றோம். தயை கூர்ந்து விடையளியுங்கள்.

வீரவர்மா—லோசனை:— ஆத்மானந்தரே! எங்கள் பாரத்தைத் தங்களிடம் விட்டு விட்டோம். இனித்தாமே அவர்களுக்குத் தாயும், தந்தையும், தெய்வமும் ஆசிரியரும் ஆவீர்கள். கண்மணிகளே! இன்பமாய் ஆசிரியரிடம் கல்வி கற்று நீடூழி வாழ்வீர்களாக.

---

## முதல் அங்கம்.— நான்காம் காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:—

ஆத்மானந்தர் ஆசிரியர் — குணமாலிகா, ஜெகன் மோகன், புண்யபாலன், வித்தியார்த்திகள்.

இடம்:— ஆசிரியர் ஆத்மானந்தர் பாணசாலை.

காலம்:— சுமார் ஏழு வருஷம் அப்பியாஸம் குருகுல வாஸம்.

கண் மூன்றுடையான் தாள் சேர்தல் கடிதினிதே
தொன்மாண் துழாய்மாலை யானைத் தொழலினிதே.
முந்துறப்பேணி முகநான்குடையானைச்
சென்றமர்ந் தேத்தல் இனிது.

(இனியவை நாற்பது)

(ஆத்மானந்தர் சிறுவர்களுடன் பாடசாலம் செல்கின்றார்)

ஆத்மானந்தர்:— குழந்தைகளே! இதுவே என் குடிசை. இவ்விள மரங்கள் இளந்தென்றல் வீசட் இப்பாத பங்கள் இனிய கனிகளையும் அரியமலர்களையும் நமக்கு மட்டின்றி அளிக்கும்.

குணமாலிகா:— ஐயா, இதுவே பூலோக சுவர்க்க மென்றெண்ணுகிறேன். இந்த நிம்மதியான தலத்தின் னமைப்பும் சுற்றுப்புறங்களின் அமைப்பும் எங்கள் மனத்தைக் கொள்ளை கொண்டு விட்டன.

ஆத்மானந்தர்:— குணமாலிகா! நீயும் உன் சகோதரர் களும் நாளை முதல் காலையில் சாஸ்திரப் பயிற்சியும் உச்சியில் ஆயுதப் பயிற்சியும் மாலையில் வாகனப்பயிற்சியும் பெற வேண்டும்.

குணமாலிகா:— ஐயா! தமது சித்தம் எங்கள் பாக்யம்.
(ஆத்மானந்தர் குணமாலிகா, ஜெகன்மோகன், புண்யபாலன், மூவருக்கும் கற்பிக்கின்றார்.)

ஆத்மானந்தர்;— குழந்தைகளே! நேற்று சொல்லிக் கொடுத்த பாடங்களைச் சொல்லுங்கள்.

குணமாலிகா:— ஐயா! என்பாடத்தைச் சொல்லு கிறேன். "சாந்தாகாரம் புஜக சயனம்........"

ஆத்மானந்தர்:— குணமாலிகா! நீ நன்றாய்ப் படித்தி ருக்கிறாய். ஆயினும் சிறிதும் ஊக்கங் குறையாதபடி கருத் துடன் கற்கவேண்டும். ஜெகன்மோகனு! நீ எட்டாவது வாய்ப்பாடு சொல்லு.

ஜெகன்மோகன்:— ஓரெட் டெட்டு, ஈரெட்டு பன்ன ண்டு, அஞ்செட்டு முப்பத்தேழு.

ஆத்மானந்தர்:— பேஷ்! பேஷ்!! வெகு நன்றாயிருக் கிறது. ஜெகன்மோகனு! நீ குணமாலிகாவைப்போல் கருத் தாய்ப் படிக்கவேண்டாமா? நீ ராஜ்யபாரத்தைச் சுமக்க வேண்டியவனல்லவா?

ஜெகன்மோகன்:— ஐயா! இனி கருத்தாய் படிக் கிறேன். மன்னிக்கருள்க. (மற்றப்பிள்ளைகள் வேழமுகம் முறையம் சொல்லுகிறார்கள். ஆசிரியர் கவனித்துக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.)

| | |
|---|---|
| சிந்தித்தவர்க்கருள் கணபதி | ஜய ஜய |
| சீரிய யானைக்கன்றே | ஜய ஜய |
| அன்புடையமரர்கள் காப்பாய் | ஜய ஜய |
| ஆவித்துணையே கணபதி | ஜய ஜய |
| இண்டைச் சடைமுடி இறைவா | ஜய ஜய |
| ஈசன் தந்தருள் மகனே | ஜய ஜய |
| உன்னிய கருமம் முடிப்பாய் | ஜய ஜய |
| ஊர்வன சந்தி உகந்தாய் | ஜய ஜய |
| எம்பெருமானே இறைவா | ஜய ஜய |
| ஏழுலகுந்தொழ நின்றாய் | ஜய ஜய |
| ஐயா கணபதி நம்பியே | ஜய ஜய |

ஒற்றை மருப்புடை வித்தகா ஜய ஜய
ஓங்கிய யானைக் கன்றே ஜய ஜய
ஒளிவிய மில்லா அருளே ஜய ஜய
அக்கர வஸ்து வானவா ஜய ஜய

ஆத்மானந்தர்:—சிறுவர்களே! போதும். சிறிது சட்டம் எழுதுங்கள். புண்யபாலா! பன்னிரண்டு மாதங்களின் பெயரையும் வரிசையாய்ச்சொல்லு.

புண்யபாலன்:— ஆசிரியரே! சொல்லுகிறேன். பிழையிருப்பின் பொறுத்தருள்க. சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, ரோகிணி, மிருகசீரிஷம். .... .... .... .... .... ....

ஆத்மானந்தர்:— குழந்தாய்! பேஷ் நன்றாய்ப் படித்திருக்கிறாய். நீ இப்படிப் படித்தால் எனக்கு நல்ல பெயர் கிடைக்குமா? நீதான் கல்விமானாய் விளங்குவாயா! நல்லது நக்ஷத்திரங்களின் பெயர்களைச் சொல்லு.

புண்யபாலன்:— ஐயா! சொல்லுகிறேன். கொஞ்சம் தடவிச்சொன்னாலும் மன்னிக்கவேண்டுகிறேன். அச்வதி, பரணி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி,

ஆத்மானந்தர்:— புண்யபாலா! பலே! பலே!! வெகு திறம்; நிறுத்து போதும். நாளைக்காவது சரியாய்ப் படித்துச் சொல்லு.

ஜெகன்மோகன்:— அக்கா! உனக்கு உபாத்தியாயர் நன்றாய்ப் பாடங்களைக் கற்றுக் கொடுக்கிறார். நீயும் நன்றாய்ப் படிக்கிறாய். எனக்கு அவரைப் பார்க்கும் பொழுதே பயமாயிருக்கிறது. அதனால்தான் எனக்குப் பாடம் விளங்கவில்லை. புண்ய பாலனும் உபாத்தியாயரைக் கண்டவுடனே நடுங்குகிறான்.

குணமாலிகா:— ஜெகன்மோகனா! உபாத்தியாயர் புலியா? கரடியா? குற்றம் அவர்மீதா? உங்கள்மீதா? வீணே உபாத்தியாயர் மீது குறை கூறுகிறீர்கள். இனியாவது கருத்தாய்ப் படியுங்கள்.

(ஆத்மானந்தரைப் பார்த்து)

ஸாயணா:— ஐயா! ஐயா!! ஐயா!!! நான் பாடஞ் சொல்றேன் கேளுங்க.

ஆத்மானந்தர்:— ஸாயணா! உன் குணம் எனக்கு நன்றாய்த் தெரியும். கொஞ்ச நேரம் தமாஷாய்க்கழியும். சொல்லு பார்க்கலாம்.

ஸாயணா:— கண் தெரியாதவனே குருடன்.
வழிமறித்தடிப்பவனே திருடன்.
பணமில்லாதவனே முழு ஏழை.
மணமில்லாததுவே வெண்தாழை.

ஆத்மானந்தர்:— ஸாயணா! சற்றுப்பொறு. உன் பாடம் முழுவதும் பள்ளிக்கூட நேரஞ் சென்று கேழ்க்கிறேன். சற்றுநேரம் பாடம் பார்த்து எழுது.

ஸாயணா:— ஐயா! ஐயா!! நான் அழுவேன். உன் எழுத்தை எடுத்துக்கிட்டு என் எட்டைத்தா.

ஆத்மானந்தர்:— ஸாயணா! கோபமுள்ளவனும், பிடிவாதமுள்ளவனும், ரோஷமுள்ளவனும், கல்விகற்பதற்குத் தகுதியற்றவனாவான். சற்றுப்பொறு, சும்மா இரு.

ஸாயணா:— ஐயா! மன்னித்தருள்க. இனி ஒழுங்காய்ப் படிக்கிறேன்.

ஆத்மானந்தர்:— தற்காலம் பெண்மக்கள் ஆண்மக்களை விட புத்தி கூர்மையுள்ளவர்களாய் விளங்குகின்றனர். நம் குணமாலிகா பல விதத்திலும் இச்சிறார்களைவிடச் சிறந்து விளங்குகிறாள். ஜெகன்மோகன் அவளிலும் வயதிற்சிறியன். புண்யபாலனோ மூவரினும் இளையோன். ஆண்பாலர் இவ்விருவரும் போரில் முன்வைத்த காலைப் பின் வைக்க மாட்டார்கள் என்பது நிச்சயம். குணமாலிகாவும் வயதில் முதிர்ந்தாள். இனி இம்மக்களை விராட மன்னன் இல்லம் சேர்த்து விடை பெற்று வருதலே பொருத்த முடைத்தாகுமென்று எண்ணுகிறேன். குணமாலிகா கல்வி நலன், குண நலன், இயற்கை நலன் மூன்றிலும் சிறந்தவள்.

---

## முதல் அங்கம் ஐந்தாம் காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:—

வீரவர்மா விராட தேசாதிபதி; வாயுவேகன் தூதன்; ஆத்மானந்தர் ஆசிரியர்; ஜெகன்மோகன், குணமாலிகா, புண்யபாலன், வீரவர்மாவின் மக்கள்; லோசனை பட்ட [மஹிஷி.

இடம்:— வீரவர்மா அரண்மனை.

காலம்:— காலை நேரம்.

பயக்குறுமென் மனமணுகாப்பாதை காட்டி
வல்வினையைப்பறித்தனையே வாழ்வே! நான் என்
செயக்கடவேன் செயலெல்லாம் நினதேயென்று
செங்கை குவிப்பேனல்லாற் செயல்வேறில்லை.

(தாயுமானவர் பாடல்)

வீரவர்மா:— மோசனு! குழந்தைகள் குருகுல வாசஞ் சென்று ஏழு ஆண்டுகள் கழிந்தன. அவர்கள் உடல் நலம் அடிக்கடித் தூதர் மூலம் அறிந்துள்ளோம். ஆனல் அவர்களது கல்விக் தேர்ச்சியும் குணமேம்பாடும், எவ்வளவினதோ நாம் அறியோம். எல்லாம் ஈசன் செயல்.

(ஆத்மானந்தர்:— குணமாலிகா, ஜெகன்மோகன், புண்ய பாலன், இவர்களை விராட அரசனிடம் சேர்ப்பித்தல்)

வாயுவேகன்:— மன்னர் மன்னவரே! நமது செல்வக் குழந்தைகள் தமது ஆசிரியரோடு இரதமேறிக் கடைவீதி வழியே வருகின்றனர். இதைத் தெரிவிக்கவே ஓடோடியும் வந்தேன்.

ஆத்மானந்தர்:— அரசர் பிரானே! தமக்கு மங்களம் உண்டாகுக. இதோ நமது மக்கள் அறிவினும் ஆற்றலினும் நிரம்பி விளங்குகின்றனர். ஆயினும் குணமாலிகாவே மற்றையரினும் பலமடங்கு உயர்ந்தவள்.

வீரவர்மா.— ஆசிரியர் திலகமே! தமது வரவு நல்வரவாகுக. இப்பெருதவியை நான் இவ்வுடலுள்ளளவும் மறவேன். சிலபகல் எனது குடிசையில் இருந்து பின்னர் தம் நகர் செல்வீராக.

ஆத்மானந்தர்:— அரசே! தமது கிருபை எனது பாக்கியம்.

ஸுபுத்தி:— ஆத்மானந்தரே! உமது திறமையை என்னென்றுரைப்பேன். குணமாலிகாவின் கல்வித் தேர்ச்சியைக்கண்டு அதிசயிக்கின்றேன்.

ஆத்மானந்தர்:— நண்பரே! எனது முயற்சி ஒரு தூண்டுகோலேயாகும். குழந்தைகளின் நுண்ணறிவே அவர்கள் அறிவு முதிர்ச்சிக்குப் பெரிதும் காரணமாகும். தவிரவும் வினைப்பயனுக்குத்தக்கபடியே ஒவ்வொருவனும் கஷ்டசுகங்களை அனுபவிக்கின்றான். அதுபற்றியே திருவள்ளுவனாரும்

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தலரிது."

என்று அருள்கூர்ந்து கூறியுள்ளார். அன்று அயன் எழுதிய எழுத்தை யாரால் அழிக்கமுடியும்?

வீரவர்மா:— நல்லது ஆத்மானந்தரே! உம்மால் எனது குலம் புகழ் எய்தும். தங்களுக்குக் கடவுள் கிருபையால் எல்லாவித நன்மைகளும் உண்டாகுக.

ஆத்மானந்தர்:— குழந்தைகளே! பாஞ்சாலம் போய் வருகின்றேன். கீர்த்திமான்களாய்ச் சிறந்து விளங்குவீர்களாக. அதுவே எனக்கும் நும் தந்தைக்கும் பெருமை தரும்.

ஜெகன்மோகன், குணமாலிகா, புண்யபாலன்:— ஐயா! நமஸ்கரிக்கின்றோம். தங்கள் கிருபா நோக்கம் எம்மிடம் எப்பொழுதும் குறைவின்றி இருக்கவேண்டும்.

ஆத்மானந்தர்:— குணமணிகளே! நீங்கள் அரோக திடசரீரத்தோடு செல்வச்சிறந்சீவிகளாய் விளங்குவீர்களாக.

---

## முதல் அங்கம். ஆருங்காக்ஷி.

---

நாடகபாத்திரங்கள்:—

வீரவர்மா விராடதேச மன்னன்; ஸுபுத்தி, கண்டகர் மந்திரிகள்; லோசனு பட்டமஹிஷி.

இடம்:— வீரவர்மா அரண்மனை.

நேரம்:— பிற்பகல்.

ஈசனாய்ப்பரம தத்துவனாகி
ஈறிடை முதலிலனாகி
ஏசறு மணியாய் எவைக்குமாதாரம்
ஆகியே தனக்கவை இலையாய்ப்
பாச மோசகனாய் அநாதிமுத்தனுமாய்
பகரு ஞானானந்தக்கடலாய்
ஆசையாற் காண்போர்க்கு அற்புதவடிவாம்
அம்பிகா பதியினைப்பணிவாம்.

(பரசிவ வணக்கம்)

வீரவர்மா:— மந்திரிகளே! நமது குழந்தை குணமாலிகா கல்வி நிரம்பினவளாய் மங்கைப்பருவம் வாய்ந்து விளங்குகின்றனள். அவளுக்கு ஏற்ற கணவன் ஒருவனைத் தேடுவதே நமது அடுத்த முயற்சியாகும். அதுவரையில் நமது குழந்தை குணமாலிகாவுக்கு ஒரு சிறந்த மாளிகை யொன்று அமைத்து அதில் சில பணிப்பெண்களோடு அவளை இருக்கும்படி செய்து, அம்மாளிகையைத்தக்க காவலோடு அமைக்கவேண்டுமென்பது எனது எண்ணம். நுமது அபிப்பிராயம் எப்படி இருக்குமோ? லோசனாவும் என் அபிப்பிராயத்தை ஆமோதிக்கிறாள்.

கண்டகர்:— புவியரசே! நுமது விருப்பம் சரியே. ஆயினும் நமது பெண்மணியைப் பாதுகாக்கச் சில ஆயுத பாணிகளாகிய போர்வீரர்களை அம்மாளிகையின் நாற்புறங்களிலும் தக்க எச்சரிக்கையுடன் நிற்கச் செய்யவேண்டும்.

ஸுபுத்தி:— அரசே! நண்பர் சொல்வது சரியே. ஆயினும் நம் குணமாலிகாவும் அறிவிற் சிறந்த மங்கை. ஆகையால் அவள் தக்க முன் ஜாக்கிரதையோடு இருப்பாள் என்பதிற் சந்தேகமே இல்லை.

வீரவர்மா:— ஸுபுத்தி! டிய சீக்கிரம் மேகமண்டலத்தை அளாவும்படியான ஒரு உப்பரிகை கட்டி அதில் குணமாலிகாவை இருக்கும்படி செய்யவும். அம்மாளிகைக்குத் தக்க காவல்களையும் அமைக்கவும்.

ஸுபுத்தி:— அரசே! தமது ஆக்ஞையைச் சிரமேற்கொண்டேன்.

கண்டகர்:— அரசே! நமது விருப்பப்படி மாளிகை டி முடிந்தது. அம்புஜாக்ஷி, விமலா என்ற சில பணிப்பெண்களை குழந்தை குணமாலிகாவின் உதவிக்கு அமைத்துள்ளோம். அவ்வரண் தக்க காவலோடும் அமையப்பெற்றுளது.

வீரவர்மா—லோசனு:— அமைச்சர்களே! தங்களைப் போன்ற மந்திரிகளைப்பெற்ற எனது பாக்யமே பாக்யம். நீங்கள் நீடூழி வாழ்வீர்களாக.

ஸுபுத்தி—கண்டகர்:— அரசர் பெருமானே! நீடூழி வாழ்க. நாங்கள் விடைபெற்றுக்கொள்கின்றோம்.

வீரவர்மா—நல்லது போய்வாருங்கள் அமைச்சர்களே! கடவுள் உங்களைக் காப்பாராக.

முதல் அங்கம் முற்றிற்று.

## இரண்டாம் அங்கம்—முதற் காக்ஷி.

நாடக பாத்திரங்கள்:—

அனங்கபாலன் வங்கதேசாதிபதி, வனஜா பட்ட மஹிஷி; ஆரியோத்தமர் தனசேகரர் வங்கதேசாதிபதியின் மந்திரிகள்; ஸாயணு விதூஷகன்; நகரமாந்தர் சமயோஜிதம்; பிரஜண்ட வீர்யன் வங்கதேசாதிபதியின் சேனைத்தலைவன்; விழியன் சேவகன்; சுதர்சனன் வங்கதேச மன்னான் இள வரசன்.

இடம்:—வங்க தேசமன்னன் அரண்மனையிலும் அதன் வெளியிலும்.

நேரம்:— காலை.

வித்தாகி முளையாகி விளைவதாகி விளைவிக்கும்
பொருளாகி மேலுமாகிக்
கொத்தாகிப் பயனாகிக் கொள்வோனாகிக்
குறைவாகி நிறைவாகிக் குறைவிலாத
சத்தாகிச் சித்தாகி இன்பமாகிச் சதாநிலையாய்
எவ்வுயிர்க்கும் சாக்ஷியாகி
முத்தாகி மாணிக்கமாகித் தெய்வமுழுவயிரத்
தனிமணியாய் முளைத்ததேவே.

(திருவருட்பா.)

அனங்கபாலன்:—ஆரியோத்தமரே! தனசேகரரே! தங்களைப்போன்ற நல்லமைச்சர்களைப் பெற்றிருப்பினும் நமது இளவரசன் சுதர்சனன் மிகுந்த பயந்தவனையும் கோழைத் தனமுள்ளவனையும் இருத்தற்குக் காரணமென்ன?

**ஆரியோத்தமர்:—** *அரசே! தாம் அஞ்சா நெஞ்சுபடைத்த வீரசிகாமணி. தமது மைந்தனும் ஆண்மையிலோ வீரத்திலோ சிறிதும் தமக்குக் குறைந்தவனல்லன். கல்வியிலும் தாழ்ந்தவனல்லன். பாங்கு பரிசு நன்கு அறிந்தவன்.*

**தனசேகரர்:—** *நராதிபதியே! நுமது செல்வச் சிரஞ்சீவி சுதர்சனன் நிர்மலமான மனமும், தெளிவான புத்தியும், துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்யும் திறமையும் வாய்ந்தவன். ஆனால் தேவரீரிடத்தில் அளவு கடந்த மரியாதையும் பயபக்தியும் உடையவன்.*

**அனங்கபாலன்:—** *குழந்தை சுதர்சனன் பிடிவாத குணமுள்ளவனாய் இருக்கிறான். ஆனால் என் ஆணையை எக்காலத்திலும் மீறினானில்லை. எதையும் என்னிடம் நெருங்கித்தெரிவித்துக்கொள்வதில்லை. சாமான்ய விஷயங்களைக் கூட என்னிடம் நேரில் சொல்ல பயப்படுகிறான். இதற்கென்ன செய்யலாம் தனசேகரரே!*

**தனசேகரர்:—** *அரசே! குழந்தை சுதர்சனன் தோள்களில் விஜயலக்ஷ்மி தாண்டவம் செய்கின்றனள். அவன் நீடூழி சிறக்க வாழ்வனென்பதிற் சிறிதும் ஐயமில்லை.*

**அனங்கபாலன்:—** *மந்திரி! ஈசன் அங்ஙனமே அருள் புரிவாராக.*

**தனசேகரர்:—** *அரசே! நம் குழந்தை சுதர்சனன் ஒற்றர் மூலமாயும், தானே நேரில் உருமாறிச்சென்றும் பிரஜைகளின் க்ஷேமலாபங்களை அறிந்து அவர்களுக்கு நேரும் இன்னல் தீர்த்து அவர்களைப் பாதுகாக்கும் பாங்குடையவன். பின்னர் நேரக்கூடிய எதையும் முன்னர்*

அறிந்து எச்சரிக்கையோடு நாட்டை ஆளக்கூடியவன்; ஆதலால் தாங்கள் அவனைப்பற்றிய கவலை யொழிமின்.

**அனங்கபாலன்:—** *தனசேகரரே! தங்கள் தைரிய மொழிகளால் சிறிது மனவமைதியுற்றேன். ஈசன் திருவுளம் எப்படியிருக்குமோ பார்ப்போம்.*

**ஸாயனு:—** *அரசே! என்று சொல்றீங்க தவப்பன், கீழே நின்னுகிட்டு பேசின மவன் திண்ணேலெ இருந்துகிட்டு திட்டோணமா? உங்கமவன் உத்தமென் திட்டாதீங்க.*

**வனஜா:—** *நாதா! எட்டுத்திக்கும் மட்டில்லாக் கீர்த்தி பெற்ற வங்கதேசாதிபதி தாங்கள். தங்கள் செல்வக் குமரன் இப்பொழுது யௌவன வயதுள்ள வீரசிங்கமாய் விளங்குகின்றான். நல்ல ஒரு குணவதியைத் தேடி அவளை நம் குழந்தை சுதர்சனனுக்கு மணம் புரிவித்து நாம் அந்தக் கல்யாண வைபவத்தைக் கண்டுகளிக்கவேண்டாமா? குழந்தை சொல்லமுடியாமல் மனத்தில் வைத்துக்கொண்டு ஏங்குகிறான். பெற்றதாய் தானே நான்? என்னிடங்கூட மிக பயபக்தி விசுவாசத்தோடுதான் இந்த விஷயத்தை அவன் சொல்லிக்கொண்டான்.*

**அனங்கபாலன்:—** *பிரியே! நீ சொல்வது உண்மையே. நானும் இந்தப் பாராளும் சுமையை அவனது அழகிய தோளிற் பொருத்திக் காட்டுக் தவங்கிடக்க நாட்டமுள்ளவனாய் இருக்கிறேன். ஈசன் நமது மனோரதத்தை நிறைவேற்றி வைத்தருள்புரிவாராக.*

**ஸாயனு:—** *கோமாளிச் சுப்பங்கூட தன் மகனுக்குப் பணமும் படிப்புமுள்ள பெண் வேண்டுமென்கிறான்.*

சட்டியா? பானையா? இஷ்டப்படி மாற்றிவிட. சுதர்சனன் கல்யாணம் சும்மா நடந்திடுமா?

நகரமாந்தர்:— ஹே அரசே! இது முறையோ? இது நீதியோ? ஊர் அழிந்து விட்டதே! எங்கள் ஆடுமாடுகளை யெல்லாம் வேங்கையும் நரியும் கொள்ளை கொண்டனவே! எங்களைக் காப்பாற்றுங்கள். எங்களுக்கு ஆபத்ஸகாயம் செய்யுங்கள்.

அனங்கபாலன்:— ஸபையோர்களே! சற்றுத்தாமதியுங்கள். என் பிரஜைகளின் தீனமான முறையீடு என் காதில் விழுகின்றது. (பிறகு பிரஜைகளை நோக்கி) எனதருமைப் பிரஜைகளே! ஒழியுங்கள் உங்கள் கவலைகளை. அக்கொடிய விலங்குகளால் நேர்ந்த துன்பங்கள் சூரியனைக்கண்ட பனி போல் இதோ விரைவில் நீங்கும். நீங்கள் உங்கள் தொழில் துறைகளைக் கவலையின்றிச் செய்யுங்கள். (சேனாதிபதியை நோக்கி) பிரஜண்டவீரியா! நமது வேடர் தலைவன் தந்தவக்ரனை நமது எயினப்படையுடன் கடுகிவரச் செய்வாயாக.

பிரஜண்டவீர்யன்:— அரசே! நான் அரண்மனைக்கடை வாயிற் செல்லுமுன் தமது செல்வக் குமாரன் சுதர்சனன் என்பவன் தந்தவக்ரன் முதலிய எயினப்படைவீரர்களுடனும், தப்புத்தாரை, வில், வேல், வாள் முதலியவற்றுடனும், தமது உத்தரவைப்பெற்று வேட்டைக்குச் செல்லக் காத்திருக்கின்றனன். தேவரீரது திருவுள்ளம் யாதோ?

வேடர் வர்ணனை.

பேழ்வாய் போர்த்த தாழகச்செருப்பினர்
குருதி புலராச் சுரிகை எஃகம்
அரையில் கட்டிய உடைத்தோல் கச்சையர்
தோல்நெடும்பையில் குறுமயிர் திணித்து
வாரின்வீக்கிய வரிக்கைக் கட்டியர்,

உழுவைக்கூன் எகிற் கேழல் வெண்மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலையுத்தரியர்
தலைப்பீலி நெற்றி சூழ்ந்த
கானக்குஞ்சி கவடிப் புல்லினர்.
முடுகுநாறு குடில யாக்கையர்
வேங்கை வென்று வாகை சூடிய
சங்கரன் தன் இனத்தலைவர் ஓங்கிய
வில்லும் அம்பும் நல்லன தாங்கி
எற்றிக்கல்வனம் காற்றினில் இயங்கிக்
கணையில் வீழ்த்திக்கருமா அறுத்துக்
கோலின் எற்றிக் கொழுந்தீக்காய்ச்சி
நாவில் வைத்து நாளும் உண்பவர்
(கண்ணப்பர் திருமறம்)

வரிக்கை = கைகவசம்
கேழல், கருமா = பன்றி
உழுவை = புலி
குடில = வளைந்த
கவடி = சோழி

அனங்கபாலன்:— பிரஜண்டவீர்யா! இன்றே சுதினம் தந்தையின் குறிப்பறிந்து நடப்பவனே சற்புத்திரனுவான். யான் பெற்ற பாக்யமே பாக்யம். கண்மணி சுதர்சனன் அரிய குணத்தை இன்றே அறிந்தேன். தனசேகரர் வார்த்தை வீண் போனதுண்டா?

ஆரியோத்தமர்:—அரசே! பிரஜைகளின் கஷ்ட சுகங்கள் நம்முடையனவன்றோ! எண்ணிறந்த ஜனங்கள் கலங்கித் தத்தளிக்கும் பொழுது நாம் சுகபோகங்களையனுபவித்துக் கொண்டிருப்பது தகுதியாகுமா? செய்யத்தக்கதையே செய்தான் சுதர்சனன்.

தனசேகரர்:— அரசே! இன்று காலை முதல் சுதர்சனன் ஊணுறக்கமின்றி உடல் மெலிந்து அம்பினாலடிபட்ட புலிப் போத்துப்போலப் பறந்தோடியலைந்து எயினர் படைதிரட்டி அதற்குத் தலைமைபூண்டு வாளேந்தி நிற்கின்றான்.

அனங்கபாலன்:— (அனங்கபாலன் கடைவாயில் சென்று தன் மைந்தன் சுதர்சனனை நோக்கி) சுதர்சனா! நீயோ உத்தமன். விரைவிற் காடு சென்று வரி வில்லும் வேலும் வாளுந்தாங்கி அக்கொடிய விலங்குகளை அழித்து நம் பிரஜைகளின் துயர் நீக்கி விரைவில் மீள்க. ஏ தந்தவக்ர! உஷார் வேட்டையை இனிது நடத்தி வெற்றிமாலை சூடி விரைவில் மீள்வாயாக.

தந்தவக்ரன்:— அரசே! தமது ஆணைப்படிச் சித்தமாய்நடந்து கொள்கிறேன்; விடைதந்தருள்க.

ஸாயனு:— நான் போனு புலி கரடி எல்லாம் நிமிசம் கொன்னுடுவேன். (ஒரு மண் மூட்டைக் கண்டு கரடி யென்று பயந்து ஸாயனு கீழே விழுதல்; விழியன் தூக்கி விடுதல்.)

விழியன்:— வெகு தைரியமாய்ப் பேசினீர்களே நண்பரே! ஏன் மூர்ச்சை போட்டுக் கீழே விழுந்தீர்கள்?

ஸாயனு:— நண்பா! தினம் மூணு சுடு இட்டிலி பலகாரம் பண்ணுவேன் இன்னிக்கு நாலு இட்டிலி குறைவு. அதான் மயக்கம் வந்து விட்டது.

விழியன்:— (ஸாயனுவைப்பார்த்து) நண்பா! அப்படியா? பலே! பலே! நல்ல வேளைக்கடையாளமாய் உயிர் காப்பினுய்.

**சுதர்சனன்:**—பிதாவே! நமஸ்கரிக்கின்றேன். விரைவிற் சென்று வேட்டை முடித்து இனிது நமது எயினப்படையுடன் திரும்பிவந்து தமது ஸந்நிதியில் நடந்தவற்றை விக்ஞாபனம் செய்து கொள்கிறேன். ஆசீர்வதித்து விடை தந்தருள்க.

---

## இரண்டாம் அங்கம்—இரண்டாம் காக்ஷி.

---

**நாடகபாத்திரங்கள்:**— *சுதர்சனன் வங்கநாட்டு இளவரசன்; தந்தவக்ரன் வேடர் தலைவன்; அமோகரமேந்த்ரன் வேடன்.*

**இடம்:**— *விராடதேசத்தின் எல்லைப் புறத்திலுள்ள வங்கநாட்டைச் சேர்ந்த காடு.*

**காலம்:**— *பிற்பகலும் அன்றிரவும்.*

*முன்னவனே! யானை முகத்தவனே! முத்தி நலம்*
*சொன்னவனே! தூய்மெய்ச் சுகத்தவனே!—மன்னவனே!*
*சிற்பரனே! ஐங்கரனே! செஞ்சடையஞ் சேகரனே!*
*தற்பரனே! நின் தாள் சரண்.* (விநாயக வணக்கம்)

(*சுதர்சனன் எயினர்படைத் தலைவர்களை எச்சரிக்கை செய்தல்*). *ஏ தந்தவக்ரா! அமோகரமேந்த்ரா!! கலையுங்கள் காட்டை; வெட்டுங்கள் புதர்களை; துறத்துங்கள் நாய்களை நாற்றிசைகளிலும்; முழக்குங்கள் தப்புத்தாரைகளை.*

**தந்தவக்ரன்:**— *இளவரசே! தம்முடைய கட்டளையை எதிர்பார்த்துத் தாம் ஏவியனவெல்லாம் முன்னமே செய்து சித்தமாயிருக்கிறேன். சுமார் 15 புலிகள் அடிபுண்டு குருதி வெள்ளத்திற் புரள்கின்றன. முயலினங்களும் காட்டுப்பன்றிகளும் அடிபட்டு மலைமலையாய்க் குவிந்து கிடக்கின்றன; காண்பீர்களாக.*

அகோரநேத்ரன்:— இளவரசே! செந்நாய்களும் காட்டுக் கூட்டங்களும் கால் போனவை சிலவும் தலை போனவை சிலவுமாய் வீறிட்டுக் கொண்டு கிடக்கின்றன பாருங்கள்.

சுதர்சனன்:— தலைவர்களே! உஷ்! உஷ்!! சற்று சப்தமிடாதீர்கள். அதோ தூரத்தில் எதோ ஈனமான குறலோசை காதில் விழுகிறது. இப்பொழுதோ இரவு 8-மணி ஆய்விட்டது. இனி நாம் நம் நகர் செல்ல இயலாது. இவ்விரவை இவ்விடம் கழித்து நாளைக்காலையில் நமது ஊர் செல்வோம். நான் தனியே ஆயுத பாணியாய்ச் சென்று அது யாருடைய அபயக்குரல் என்பதையறிந்து விரைவில் மீள்கின்றேன்.

தந்தவக்ரன்:— இளவரசே! நாங்கள் தக்க எச்சரிக்கையுடன் எங்கள் கூடாரங்களில் தங்கி இரவைக் கழிக்கின்றோம். இக்காட்டிலுள்ள கனி கிழங்குகளும் இம்மான்களின் ஊனும் எங்கள் ஆகாரமாக உபயோகப்படும். ஜாக்கிரதையாகச் சென்று விரைவில் மீளும்படியாய் வேண்டிக்கொள்கின்றேன்; அவசியமானால் நானும்பின் தொடர்கிறேன்.

சுதர்சனன்—:— தந்தவக்ரா! நீ மிகவும் களைத்திருக்கிறாய். சற்று நிம்மதியாய் உண்டு இளைப்பாறு. விரைவில் மீள்வேன்; கவலையொழிமின்.

(சுதர்சனன் காளிகோயிலுக்கு ஒரு குதிரைமீதேறிச் செல்கின்றான்.)

---

## இரண்டாம் அங்கம்—மூன்றும் காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:— குணமாலிகா வீரவர்மாவின் பெண்மணி செல்வக் குமரி; அம்புஜாக்ஷி, விமலா குணமாலிகாவின் பணிப்பெண்கள்; ஸாயஞ்ஞ விதூஷகன்.

இடம்:— வங்க தேசாதிபதியின் காடு.

காலம்:— இரவு.

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளுங் களிப்பே!
காணார்க்கும் கண்டவர்க்குங் கண்ணளிக்குங் கண்ணே!
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே!
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே!
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடு நின்ற நடுவே!
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே!
எல்லார்க்கும் பொதுவில் நடமிடுகின்ற சிவமே!
என்னரசே! யான்புகலும் இசையுமணிந் தருளே.

**குணமாலிகா:**— சகோதரிகளே! அந்த மல்லிகைச் செடி வதங்கி விட்டது. குண்டு மல்லிகைமுதலியன பொலிவழிந்து விளங்குகின்றன. சிலதினங்களாய் ரோஜா புஷ்பங்கள் அரிதாகிவிட்டன.

**அம்புஜாக்ஷி:**— தாயே! இப்பொழுது வெய்யில் மிகவும் கடுமையாயிருக்கிறது தினந்தோறும் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றவேண்டும். நாம் வாரம் ஒருமுறை ஊற்றச் சொல்லுகிற தண்ணீர் அவைகளுக்குப் போதுமானதாய் இல்லையென்று எண்ணுகிறேன்.

**விமலா:**— அன்னையே! நம் சகோதரி சொல்வது உண்மையே. இப்பூங்கொடிகள் வெய்யிலில் வாடிப்பொலிவற்று இருக்கின்றன. நாம் இவைகளுக்குத் தண்ணீர் விடுவது சிரமமான வேலையா?

**குணமாலிகா:**— சகோதரிகளே! இம்மாலை நேரம் இளந்தென்றல் வீசுவதால் இனிமையாய் இருக்கிறது. நாம் இச்செடிகளுக்குச் சிறிது நீர் வார்ப்போம்.

(குணமாலிகா, அம்புஜாக்ஷி, விமலா பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் விடுகிறார்கள்.)

குணமாலிகா:—அம்புஜா! விமலா!! அதோபார் அந்தக் குட்டிமான் எப்படித் துள்ளி விளையாடுகிறது? அதன் இருண்ட கண்களும் வெருண்ட பார்வையும் என் மனத்தைக் கவர்ந்துவிட்டன. சற்று நீவிர் இருவரும் சென்று அதை மெல்லப் பிடித்து என் கையில் தாருங்கள்.

அம்புஜா, விமலா:— தோழி! என்ன ஆச்சரியம் இது! இதுவோ குட்டிமான். இதற்கு இவ்வளவு தந்திரமா? நம் தாயார் குணமாலிகாவும் களைத்துப்போனாள். நாமும் நம் மாளிகையிலிருந்து இம்மான்குட்டியைத் துரத்திக்கொண்டு வெகுதூரம் வந்துவிட்டோம்.

ஸாயணு:— இது நாலுகால் மான், மாயமான், ஒரு குட்டிமான், இது போனால் ஒரு புத்திமான், நல்ல காலை மான் வந்து சேரலாச்சு.

குணமாலிகா:— தோழி! பெண்புத்தி பின்புத்தியன்றோ! நான் ஏன் இந்த துற்புத்திகொண்டேன்? ஐயோ! ஆயுதங்களும் கையில் இல்லையே! ஏதேனும் நமக்குத் துன்பம் நேருமாயின்............நாம் அதனின்றும் எப்படித்தப்புவது? அம்மட்டோ! என் பெற்றோர்கள் எவ்வளவு கவலைக்காளாவார்கள்? ஐயோ ஜகதீசா! என் மதியினத்தால் நானே எனக்குத் துன்பம் தேடிக்கொண்டேனே! என் செய்வேன்? எவ்வாறு உய்வேன்?

நிலமேழளந்த நெடுமால் பணியும் நீ மலர்பொன்னம்
பலமேவு தில்லைப் பதிகடாயர் பணிவரையிற்
கலமே! திமிங்கிலமே! சங்கமே! நற்கயில் அனமே!
சலமே! சலஞ்சலமே! என்று இரும் என் சஞ்சலமே.

என்று புலம்புகின்றாள். (சொக்கநாதப் புலவர்)

அம்புஜா:— தாயே! கடவுள் நமக்குத் துணையிருப்பார். "அகதிக்குத் தெய்வமே துணை"யென்பது பொய்யோமா? அதோ ஒரு கூட்டத்தார் வெகு வேகமாய் ஆயுதபாணிகளாய் வந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் எந்த ராஜ்யத்துப் படைவீரர்களோ?

விமலா:— அம்மணி! கவலையொழிமின். கடவுள் நம்மைக் காப்பாற்றாமல் விடார். யார் மனத்திலாவது அவர் புகுந்து நம்மைத் தக்க பாதுகாப்போடு கொண்டுபோய், நம்மாளிகை சேர்ப்பார்.

குணமாலிகா:— சகோதரிகளே! ஐயோ!! அஞ்சா என் நெஞ்சமும் துடிக்கின்றதே! பிதா இதை அறிந்தால்......... என்ன சொல்வாரோ? இவ்வளவு கட்டுக்காவலுமுள்ள இடத்தில் நாம் வசிக்கும்படி நமக்கு நம் பிதாவால் கட்டளை இடப்பட்டிருந்தும் நான் இந்த மாய மான்குட்டிக்கு ஆசைப்பட்டு மதிமோசம் போனேனே! என்ன நேரிடுமோ ஈசா! நீயே துணை. யான் திக்கற்றவளாய் இருக்கிறேன்! என்னைக் காப்பது உன் பொறுப்பேயாகும். ஓ ஜெகதீசா! அநாதரக்ஷகா!!

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடியாதே
பதிவெறுத்தேன் நிதிவெறுத்தேன் பற்றனைத்தும்
[துவிர்த்தேன்
ஆவியுடல் பொருளையுன்பால் கொடுத்தேன் உன்னருட்
ஆசை மயமாகி உனை அடுத்து முயல்கின்றேன் [பேர்
கூவியெனை ஆட்கொள நீ நினையாயோ நினது
குறிப்பறியேன் பற்பலகால் கூவி இளைக்கின்றேன்
தேவி சிவகாம வல்லி மகிழும் மணவாளா!
தெருள்நிறை வானமுதளிக்கும் கருணைநிதுதானே.
(திருவருட்பா.)

ஸாயனு:— அம்மணி! அழுவாதே உம்முலைத்திலே பால் வடியுது. நீ சந்தோஷமா இருப்பே பாப்புடாதே. அம்மா! அம்மா!! உன் பேரை மாத்தி வச்சுக்க. அகுண மாலிகா இன்னு கூப்பிட்டா நல்லா இருக்கும். நல்லா ஆசைப்பட்டே இந்த மானுக்கு.

(ஸாயனு கள்வர் கூட்டத்தைக்கண்டதும் ஓடி ஒளிகிறான்.)

---

## இரண்டாம் அங்கம்—நான்காம்காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:— குணமாலிகா வீரவர்மாவின் மகள் இளவரசி; அம்புஜா விமலா குணமாலிகாவின் தோழிப் பெண்கள்; ஸாயனு விதூஷகன்; ஜ்வாலாநேத்ரன் கள்வர் தலைவன்; வீரபத்ரன், குட்டிக்கருப்பன், வீரப்பன், கள்வர்கள்.

இடம்:— வங்கதேசாதிபதியின் காட்டிலும், அக்காட்டிலுள்ள காளிகோயில் முன்னும்.

காலம்:—நள்ளிரவு.

மணிதிகழ் வான்நதி வைத்த செஞ்சடையில்
அணிதிகழ் கடுக்கையோடு அவிர்மதி புனைந்தோன்.
விடங்கால் பன்றலை வெங்கைப் பையரா
வடங்கண் வரத்தான் மருமத்தணிந்தோன்
பாண்டியத்திரர்க்காப் பழிதபு கூடலில்
வேணவாக் கொண்டு விறகு சுமந்தோன்.
பவசாகரத்தில் வீழ்ந்த எனக்குச்
சிவசாயூச்சியம் சிறப்புடன் நல்குவன்.

அஞ்சல் நெஞ்சே! அஞ்சல் நெஞ்சே!
தஞ்சம் தஞ்சம் அஞ்சல் நெஞ்சே!

(சிவபிரான் றுதி)

குணமாலிகா:—(ஜ்வாலாநேத்ரனைப்பார்த்து) தலைவரே! இப்படை வீரர் எந்த ராஜ்யத்தைச் சேர்ந்தவர்களோ? நானும் இந்த என்னுடைய பணிப்பெண்களும் ஒரு மானைத் துரத்திக்கொண்டு இவ்வளவு தூரம் வந்து விட்டோம். இந்நள்ளிரவில் அகப்பட்டுக்கொண்டு வழி தெரியாமல் தவிக்கிறோம். என் பிதாவும், என் மாளிகைக் காவலாளர்களும் எங்கெங்கே சென்று எங்களைத் தேடுகிறார்களோ? தயை செய்து எங்களை எங்கள் மாளிகை கொண்டுபோய்ச் சேர்த்தால் உங்களுக்குப் பலவித நன்மைகளும் ஈசனருளால் பெருகும். கடவுளுடைய கருணைக்கும் பாத்திரராவீர்கள். என் தந்தையின் நன்கு மதிப்பையும் பெறுவீர்கள். சற்று தயை காட்டுவீராக. ஐயனே! நாங்கள் நிற்கதியாய் இங்கு தவித்துக் கலங்குகின்றோம்.

அம்புஜா—விமலா:— ஐயா! இது ஒரு பெரிய காரியமா? திக்கற்றுத் தவிக்கும் எங்களுக்கு இச்சிறு உதவியைச் செய்து அழியாப் பெருங் கீர்த்தியைப் பெறுவீராக. என்னவோ யோசிக்கிறீர்களே! தங்கள் மௌனம் எங்களுக்கு பயம் உண்டுபண்ணுகிறதே.

ஸாயணு:— (தனக்குள்) பேஷ்! பேஷ்!! ஆடு கசாய்க் கடைக்காரனை நம்புவது போலத்தான். இவர்களா உதவி செய்கிறவர்கள். கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது போல் இவர்களுக்கு இன்று நல்ல வேட்டைதான்.

ஜ்வாலாநேத்ரன்:— பெண்மணிகளே! எங்கள் பாக்யமே பாக்யம். பிச்சைக்குப் போனவனுக்குப் புதையல் கிடைத்ததுபோல் நீங்கள் இன்று எங்கள் கண்ணிற் பட்டீர்கள். இன்றே எங்கள் காளி பூஜை முடிவடையுந்தினம். நீங்களும் வெகு சீக்கிரம் இம்மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலக வாழ்வைப்பெற்றுச் சுகித்திருக்கப் போகிறீர்கள். யாருக்கும் கிட்டுமா அந்த பாக்யம்! நீங்கள் நல்ல அதிருஷ்டசாலிகள்.

**குணமாலிகா:**— ஐயா! தங்கள் வார்த்தையைக் கேட்டு நான் நெஞ்சு பதறுகின்றேனே! என்ன கொடுமை? ஈசா!! நீ தோன்றித் துணை புரிந்து எங்களைக் காப்பாற்றுவாயாக. எம்செயலால் ஆவது ஒன்றுமில்லை. ஆபத்பாந்தவா! ஐயா தலைவரே! அறிவுடைய ஒவ்வொருவனும் மன்னுயிரைத் தன்னுயிர்போல் கருதக்கடவன். எங்களைக் கொல்வதால் தாங்கள் அடையக்கூடிய பயன் யாதோ?

"தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி தின்னுயிர் நீக்கும் வினை."

என்ற தெய்வப்புலவர் அருளியுள்ள குறளிணைகளின் கருத்துத் தங்களுக்குத் தெரியாததோ?

**ஜ்வாலாநேத்ரன்:**— அம்மணி! நான் கள்வர் தலைவன். என் ஆணைக்கடங்கி நடக்கக் கூடியவர்கள் இதோ நிற்கிற இந்நூற்றுவர்களும். எங்களுக்குத் திருட்டும் கொலையுமே முக்கிய ஜீவனம்.

**குணமாலிகா:**— ஐயா தலைவரே! அழியா நரகுக் காளாவீர்களே! இத்தீத்தொழில் செய்வது நியாயமா?

"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று."

ஐயோ! ஒருவன் எந்தப் பிராணியையும் கொல்லாமலும் அப்படிக் கொன்ற ஒரு பிராணியின் மாம்சத்தைத் தின்னாமலும் இருந்தால் ஆயிரம் அச்வமேத யாகம் செய்த பயனைவிட அதிக மேலான பதவியையும் பயனையும் அவன் அடைவானென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றனவே! சற்று எங்களிடம் இரக்கம் கொள்ளுங்கள். எங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுங்கள்.

ஜ்வாலாநேத்ரன்:— பெண்ணே! உன் உபதேசம் செவிடன் காதில் சங்கு ஊதியதுபோலவே முடியும். ஏன் வீணே பிதற்றுகிறாய்?

குட்டிக்கருப்பன்:— பெண் பேய்களே! கழற்றுங்கள் உங்கள் ஆபரணங்களை. நில்லுங்கள் வாய் திறவாமல்.

(குணமாலிகா—அம்புஜா—விமலா மூவரும் தங்கள் ஆபரணங்களைக் கழற்றிக் கள்வர் தலைவரிடம் கொடுக்கிறார்கள். பிறகு உயிர்ப்பிச்சை கொடுக்கும்படி அவர்கள் கள்வர் தலைவனை வேண்டுகிறார்கள்.)

குணமாலிகா—அம்புஜா—விமலா:— தலைவரே! எமது உயிர் இப்பொழுது உங்கள் கையில் இருக்கிறது. அதை அளிப்பதோ ஒழிப்பதோ உமது இஷ்டம். கொஞ்சம் எம்மிடம் இரக்கங் காட்டுவீராக.

ஜ்வாலாநேத்ரன்:— பெண்களே! நும் இரக்க மொழிகளுக்கு நான் செவிகொடேன். ஏ வீரபத்ரா! குட்டிக் கருப்பா!! வீரப்பா!!! இப்பெண்மணிகளைக் கைவிலங்கிட்டுக் கொண்டுபோய் நம் குல தெய்வம் காளிதேவி சந்நிதியில் நிறுத்துங்கள். இதோ சற்று நேரத்தில் நானும் வருகிறேன்.

குணமாலிகா:— ஈச்வரா! கானல் நீரை அருந்த விரும்பி ஏமாறும் மானினங்கள் போல இக்கள்வர் கூட்டத்தினரைப் போர்வீரர்கள் என்றெண்ணி அவர்கள் உதவியை அடைய விரும்பி இப்படி மோசம் போனோமே! ஈசா! என்ன நேருமோ நான் அறியேன்.

மாயை எனும் இரவில் என் மனையகத்தே விடய
வாதனையெனும் கள்வர்தாம்
வந்து மன அடிமையை எழுப்பி அவனைத்
தமது வசமாக உளவுகண்டு

மெய்மதி எனும் ஒரு விளக்கினை அவித்து எனது
மெய்ந் நிலைச்சாளிகையெலாம்
வேறுற உடைத்து உள்ளப்பொருளெலாம்
கொள்ளை கொள மிக நடுக்குற்று நினையே
நேயமுற ஓவாது கூவுகின்றேன் சற்றும்
நின் செவிக்கு ஏறவிலையோ?
நீதியிலையோ! தருமநெறியுமிலையோ! அருளின்
நிறைவும் இலையோ? என்செய்கேன்?
ஆயமறை முடிநின்ற தில்லையம்பதி மருவும்
அண்ணலார் மகிழும் மணியே!
அகிலாண்டமும் சராசரமும் ஈன்றருள் பரசி
வானந்த வல்லி உமையே! (திருவருட்பா)

(கள்வர்கள் குணமாலிகா, அம்புஜா விமலா இவர்களைக் காளிகோவிலில் கொண்டுபோய் நிறுத்துகிறார்கள்).

---

## இரண்டாம் அங்கம்—ஐந்தாங்காக்ஷி.

---

நாடகபாத்திரங்கள்:— வெங்கோபா—காளிகோயில் பூசாரி, அம்புஜா, விமலா—குணமாலிகாவின் பணிப்பெண்கள், விழியன்—சேவகன், பலியிடுவோன், குணமாலிகா விராடதேச இளவரசி, ஜ்வாலாநேத்ரன்—கள்வர் தலைவன், வீரபத்ரன், குட்டிக்கருப்பன், வீரப்பன்—கள்வர்கள், சுதர்சனன்—வங்கதேச மன்னனது இளவரசன்.

இடம்:— காளிகோயில் சந்நிதி.

காலம்:— நள்ளிரவு.

தடக்கை மாமுகமும் முக்கணும் பவளச்சடி
லமும் சதுர்ப்புயங்களுங்கை
இடக்கை அங்குசமும் பாசமும் பதமும்
இறைப்பொழுதேனும் யான் மறவேன்.
விடக்களமுடைய வித்தகப்பெருமான்
மிகமகிழ்ந்திட வருள்பேறே!
மடக்கொடி நங்கை மங்கை நாயகி
எம் வல்லபைக்கணேச மாமணியே!

(திருவருட்பா).

வெங்கோபா:—ஏ தாயே! ஜகதீச்வரீ!! பரதேவதே!!! உன் பெருமையை இந்த உலகம் அறியும். நீ ஸர்வ பரிபூரணி. அனாதை ரக்ஷகி. (உடுக்கடித்துப்பாடுகிறான்.)

அம்புஜாக்ஷி:—பராசக்தி! நாங்கள் இந்த துஷ்டர்கள் கையில் அகப்பட்டுக்கொண்டோம். அடக்கொணாத் துயர் கொண்டு வருந்துகின்றோம். இனி என்ன நேருமோ அறியோம். கிருபையுடன் எங்களை ரக்ஷிப்பாயாக.

விமலா—ஹே லோகமாதாவே! நீ பதினாயிரம் கண்ணுடையவள் அன்றோ! அடியார் படுந்துயர் தீர்த்து ரக்ஷிக்க வேண்டியது உனது கடனன்றோ!

வெங்கோபா:— ஏய் விழியா! கடா எங்கேடா? நிறுத்தி வீசடா. தேவாராதனைக்கு நாழிகையாகிறது. இன்றையதினம் பெரிய பூஜையொன்று போடவேண்டும். வந்துவிடுவார் ஜ்வாலாநேத்ரர். இன்றையதினம் கோயிலை விட்டுப் புறப்பட மணி இரண்டுக்குக் குறைவா என்ன? நரபலி மூன்று அப்பா! அதோ கட்டியிருக்கிறது பார்.

(கடா வொன்றைத் தேவி ஸந்நிதியில் நிறுத்தி விழியன் அதை வெட்டி வீழ்த்துகின்றான்.)

**குணமாலிகா:—** (விழியனை நோக்கி) ஐயோ! இரக்கமற்ற கொடியா!! அதன் உடல் துடிக்கிறதே! உன் மனம் துடிக்க வில்லையா?

**விழியன்:—** (குணமாலிகாவை நோக்கி) பேதாய்! நீ அறிவாயோ தொன்று தொட்டு வரும் வழக்கங்களை! எங்கள் தெய்வத்துக்கு இதில்தான் திருப்தி. சும்மா இரு. உன் கதியும் இதுதான். சற்றுப்பொறு.

**அம்புஜா:—** ஜகதீசா! இக்கடுஞ்சொல் நாராசம்போல் காதில் விழுகின்றதே. யாருமற்ற பாவிகளாய் நிற்கதியாய் இந்தப் பாபிகள் கையில் சிக்கிக்கொண்டோமே! என்ன விபத்து நேருமோ அறியோம்?

**விமலா:—** தாயே! எங்கும் நிறைந்த பரம்பொருளே! துக்கத்திற்கு முடிவு மரணமேயாயினும் அதைக் காலக்கிரமத்தில் பெறவே மனம் விரும்புகிறது. இந்த உடற்சுவை விரும்பும் கொடிய பாதகர்கள் கையிலா நாங்கள் சிக்கிக் கொள்ளவேண்டும்.! நீயே துணைபுரிந்து ரக்ஷிப்பாயாக. எங்களுக்கு வேறு யார் கதி?

**ஜ்வாலாநேத்ரன்:—** வெங்கோபா! என்ன அபிஷேகம் ஆயிற்று? மாவிளக்கேற்றிப் பள்ளயம் போடு தேவி சந்நிதியில். இம்மூன்றும் சேர்த்து என் பிரார்த்தனைப்படி ஸ்திரீபலி 108 கணக்காகிறது. இந்த தக்ஷிணையைப் பெற்றுக்கொள். சீக்கிரம் எல்லாம் நடக்கட்டும். நற்காரியங்களுக்குப் பலவித இடையூறுகள் நேருவது ஸகஜம். எனது இஷ்ட தெய்வ பூஜை இனிது நடைபெறட்டும். ஜல்தி! ஜல்தி!! காலதாமதம் செய்யவேண்டாம்.

**வெங்கோபா:—** (கையை நீட்டி ஜ்வாலாநேத்ரனிடம் தக்ஷிணையைப் பெற்றுக்கொண்டு, பின்னர் அவனை நோக்கி) அண்ணே! கணக்கு சரிதான். நீங்கள்

போன பூஜைக்கே தக்ஷிணை கொடுக்கவில்லை. அதையும் சேர்த்து இப்பொழுது கொடுத்துவிட்டீர்கள். எல்லாம் தயார். காவு கொடுத்து தீபாராதனை காட்டவேண்டியது தான்.

ஜ்வாலாநேத்ரன்:— ஏ பெண்மணிகளே! குனியுங்கள் தேவி சந்நிதியில். பிரார்த்தித்துக்கொள்ளுங்கள் பரதேவதையை. உங்களுக்கு இவ்வுலக வாழ்க்கை இன்னும் சில நிமிஷங்களில் முடிவு பெறும். மறுவுலக வாழ்க்கை அழியாமல் நிலைத்து நிற்கும்.

(குட்டிக்கருப்பன், வீரபத்ரன், வீரப்பன் மூவரும் அம்மூன்று பெண்மணிகளையும் குனியச்செய்து ஓங்கிய அரிவாளேந்தி நிற்கின்றார்கள்.)

(எயினர் படைவீரரை விட்டு விடைபெற்று வந்த சுதர்சனன் காளி ஸந்நிதியில் குதிரைமீதிருந்து உருவிய கத்தியுடன் குதிக்கின்றான்.)

சுதர்சனன்:— யாரடா இது? நில்லடா! என்ன கொடுமையடா இது! ஐயோ ஸ்திரீஹத்தி ஆரம்பித்தீர்! என்ன அநியாயம் இது? நிறுத்துங்கள். இன்றேல் இந்த வாளுக்கு நீங்கள் யாவரும் இரையாவீர்கள்.

குணமாலிகா:— (சுதர்சனனை நோக்கி) பிராணரக்ஷகரே! தாங்களே எங்கள் பிரத்யக்ஷ தெய்வம். நல்லவேளைக்குக்கடவுள் தங்கள் மனத்தில் எங்கள் உதவிக்கு வர எண்ணம் உண்டுபண்ணினார்.

ஜ்வாலாநேத்ரன்:— (சுதர்சனனை நோக்கி) நீ யாரடா என்னைத்தடுக்க? இது எங்கள் ஜாதி வழக்கம். என் முன்னோர்கள் செய்துவந்த பழக்கம். நீ சொல்லி நான் கேட்க்க மாட்டேன். உன்னால் கூடுமானால் உன் வீரத்தைக்காட்டி எங்களைக் கொன்று இவர்களை மீட்டுச் செல்வாயாக.

சுதர்சனன்:— மூடா! துராத்மா! என்னசொன்னாய்? இதோ உன்னையும், உன் இனத்தாரையும் தலை வேறு, உடல் வேறு, கால் வேறாகச் செய்து உங்கள் உடல்களைப் பேயும், நாயும், கழுகும் தின்னச் செய்கிறேன். இன்றோடு உங்கள் பயம் உலகில் ஒழியட்டும். (சுதர்சனன் பாய்கிறான்—வெட்டி வெட்டிக் கள்வர்களை வீழ்த்துகிறான். பலர் மாண்டனர். சிலர் தப்பி ஓடினர்).

குணமாலிகா:—ஈசா! உன் மகிமையை யாரால் அறிய முடியும்? இந்த ஆபத்துக்கால உதவி உன் தண்ணருளாலன்றோ எங்களுக்குக் கிடைத்தது. பிராண ரக்ஷகரே! (சுதர்சனனை நோக்கி) நாங்கள் உங்கள் அடைக்கலம் தாமே எங்களுக்கு எல்லாத்துணையும் ஆவீர்.

அவனன்றி ஓரணுவும் அசையாதெனும் பெரிய
    ஆப்தமொழி ஒன்று கண்டால்
அறிவாவதேதுசில அறியாமை யேது? இவை
    அறிந்தார்கள் அறியார்கள் யார்?
மௌனமோடிருந்ததார்? என்போல் உடம்பெலாம்
    வாயாய்ப் பிதற்றுமவர் யார்?
மனதெனவும் ஒரு மாயை எங்கேயிருந்து வரும்?
    வன்மையோடாக்க மெங்கே?
புனம் படைப்பதென்? கர்த்தவ்யம் எவ்விடம்?
    பூதபேதங்கள் எவ்விடம்?
பொய் மெய் இதமகிதமேல் வருநன்மை தீமையொடு
    பொறை பொறுமையும் எவ்விடம்?
எவர் சிறியர்? எவர் பெரியர்? எவர் உறவர்? எவர்
    யாது முனையன்றி உண்டோ? [பகைஞர்?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்குயிராகி
    எங்கு நிறைகின்ற பொருளே!

---

(இரண்டாம் அங்கம் முற்றிற்று.)

## மூன்றாம் அங்கம்—முதற்காக்ஷி.

---

**நாடகபாத்திரங்கள் :—** காவலாளர்கள் சமயோஜிதம்—வீரவர்மா, விராடதேசமன்னன்—லோசனா, வீரவர்மாவின் பட்டமஹிஷி— ஸுபுத்தி, கண்டகர், வீரவர்மாவின் மந்திரிகள்—தந்தவக்ரன், எயினர் தலைவன்—ஜெயபாலன் வீரவர்மாவின் சேனைத்தலைவன்—ஜெகன்மோகன், புண்யபாலன், வீரவர்மாவின் இளவரசர்கள்.

**இடம் :—** வீரவர்மாவின் அரண்மனை.

**காலம் :—** பிற்பகலும் மாலை நேரமும்.

அம்பலத்தரசே அருமருந்தே
ஆனந்தத்தேனே! அருள் விருந்தே!
பொது நடத்தரசே! புண்ணியனே!
புலவரெல்லாம் புகழ் கண்ணியனே!
மலைதருமகளே! மடமயிலே!
மதிமுக அமுதே! இளங்குயிலே!

**காவலாளர் :—** (வீரவர்மாவை நோக்கி) ஜயவிஜயீபவ! மகப்ரபோ!! நேற்றுமாலை முதல் குழந்தை குணமாலிகா வெளியே வரவில்லை. அவளது தோழிப்பெண்களையும் நாங்கள் காணோம். என்ன விபத்து நேர்ந்ததோ அறியோம். ஐயோ! எங்கள் மனங்கள் துடிக்கின்றனவே!! என்ன உத்திரவு இடுகின்றீர்களோ தேவரீர் அதனைச் செய்து முடிக்கச் சித்தமாயிருக்கின்றோம். இப்பிழை பொறுத்தருள வேண்டுகின்றோம்.

**வீரவர்மா** :— *காவலாளிகளே! என்ன கல்லைத் தூக்கித் தலையில் போடுகிறீர்கள்? நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்? உங்களுக்குத் தெரியாமல் அவர்கள் எப்படி வெளிச்சென்றிருக்க முடியும்? கடமை மறந்த கசடர்களா! என்ன செய்தீர்கள் இந்நேரம்? சீ! சீ!! நில்லாதீர்கள் என் முன். விரைவிற் சென்று விவரமறிந்து எனக்குத் தெரிவியீரேல் உங்கள் தலைகள் மத களிற்றினங்களின் கால்களால் இடறப்படும். செல்லுங்கள் விரைவில். நில்லாதீர்கள் என் முன்.*

*அன்றே என்றன் ஆவியும் உடலும்*
*உடைமை எல்லாமும்*
*குன்றே அனையாய்! என்னை ஆட்*
*கொண்டபோதே கொண்டிலையோ!*
*இன்றோர் இடையூ றெனக் குண்டோ?*
*எண்டோள் முக்கண் எம்மானே!*
*நன்றே செய்வாய் பிழை செய்வாய்*
*நானோ இதற்கு நாயகமே.*

(*திருவாசகம்—குழைத்த பத்து*)

*ஏ ஈசா! உன் தண்ணருளோ இது! என் குணமணியை எங்கு தேடுவேன்? எப்பொழுது காண்பேன்? எவ்வாறு உய்வேன்.!*

**காவலாளர்** :— *அரசே! நெடு நேரம் வரையில் நமது பெண்மணிகள் செடிகளுக்கு நீர் வார்த்துக் கொண்டிருந்தார்கள். பிறகு நாங்கள் அவர்களைக் காணவில்லை. இரவெல்லாம் தேடியும் அவர்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை. எங்கள் குற்றம் கடிந்து பொறுமையுடன் எங்களை ரக்ஷிக்க வேண்டும். "வேந்தன் சீறின் ஆந்துணை இல்லை" என்பது பொய்யோ? தமது சீற்றத்துக்கு நாங்கள் இலக்காகி அதனைத் தாங்க எங்களுக்கு ஆற்றலுண்டோ? தயாநிதியே! எங்களைக் கருணை மிகுதியால் மன்னித்தருளவேண்டும்.*

இனி, தக்க எச்சரிக்கையோடு இருக்கிறோம். குழந்தைகளின் வரலாறும் விரைவில் அறிந்து மீள்கின்றோம்.

லோசனா:— பிராணநாதா! என் செய்வேன்? ஓ தெய்வமே! உன் சோதனையோ இது! என் மனந்துடிக்கிறதே! உடல் பதருகின்றதே! நாக் குழதழுக்கின்றதே! ஐயோ குணமாலிகா! குணமாலிகா!! குணமாலிகா!!! என் கண்ணே! நீ எங்கு சென்றாயோ? என் செய்கின்றாயோ? எந்தப்பாபிகள் கையில் சிக்குண்டாயோ? ஐயோ! காட்டு மிருகங்களுக்கு இரையானாயோ? அல்லது நமது பகைவர் கையிற் பட்டனையோ? என் செய்வேன்? தீனதயாளா! கொஞ்சம் கிருபை செய்வாயாக. (மூர்ச்சித்துக் கீழே விழுகிறாள்.)

தொல்லை வினைக்கீடாய் சுழல்கின்றநாளொருத்தி
எல்லையிலா நின் கருணை யெய்துவளோ? வல்லவனும்
மோன குருவே! முழுதினையும் தானுணர்ந்த
ஞான குருவே நவில் (தாயுமானவர்.)

வீரவர்மா:— (அமைச்சர்களை நோக்கி) மந்திரிகளே! என் கண் இனித்துஞ்சா. ராஜாங்க விஷயங்கள் இனி என் மனத்தில் தங்கா. நான் இனி உண்ணவு மாட்டேன். எவ் விதத்தாலோ என் கண்மணி குணமாலிகாவையும் அவளது பணிப்பெண்கள் அம்புஜா, விமலா இவர்களையும் தேடி எனது வீடு சேர்க்க முயல்வீர்களாக.

ஸேநாபதி:— அரசே! கலங்கவேண்டாம். நம் குழந்தைக்கு ஒரு தீதும் வாராது. அவளைத் தேடிக் கொணர்ந்து நுமது ஸந்நிதியில் சேர்ப்பது எனது கடன் (லோசனாவை நோக்கி) அம்மணீ! கவலையொழிக. கடவுள் தங்களைக் கலங்கவிடமாட்டார். கூடிய சீக்கிரம் குணமாலிகாவை அழைத்துவந்து தமது இல்லம் சேர்க்கிறேன்.

தூணாய் அதனூடரியாய் வந்து தோன்றிப்
பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய்

சேனார் திருவேங்கடமாமலை மேய
கோனாகனையாய்! குறிக்கொள் எனை நீயே.

முதற் பத்து—பத்தாம் திருமொழி.

ஜகத்சா! ஆதிமூலமே!! என் மனக்கவலையை நீக்குதல் உனக்கு அரிதோ? எரிவாய்ப்பட்ட புழுப்போல் தத்தளிக்கும் எனது அரசன் அரசி இவர்கள் மாட்டுச் சிறிது அன்பு காட்டி ரக்ஷிப்பாயாக.

**கண்டகர்:—** தந்தவக்ரா! ஜயபாலா!! நீங்கள் நாற்றிசையும் நமது தூதர்களுடன் சென்று கிராமங்கள், பட்டணங்கள், மலைப்பிராந்தியங்கள், காடுகள் எங்கும் சென்று காணாமற்போன குணமாலிகா, அம்புஜா, விமலா, இவர்களின் வரலாறு என்னவென்று விவரமாய் அறிந்து விரைவில் வாருங்கள்.

**ஸுபுத்தி:—** ஜெகன்மோகனா! புண்யபாலா!! நீங்கள் வில்லும், வாளும் ஏந்தி ஒரு சிறு சேனை உங்களைப் புடைசூழச் சென்று ஸர்வதேச மன்னர்களையும், ராஜகுமாரர்களையும், நம் குழந்தைகளின் வரலாற்றை விசாரித்துத் தெரிந்துகொண்டு விரைவில் வருவீர்களாக.

**தந்தவக்ரன்—ஜெயபாலன்:—** (மந்திரிகளை நோக்கி) அமாத்யரே! நாங்கள் தங்கள் கட்டளைப்படி எங்கும் சென்று தேடி எவ்வாற்றாலும் நமது செல்வக் குழந்தைகளை மீட்டு வருகின்றோம்.

மாற்றறியாத செழும்பசும் பொன்னே!
மாணிக்கமே சுடர் வண்ணக்கொழுந்தே!
கூற்றறியாத பெருந்தவருள்ளக்
கோயிலிருந்த குணப்பெருங் குன்றே!
வேற்றறியாத சிற்றம்பலக் கனியே!
விச்சையில் வல்லவர் மெச்சும் விருந்தே!

சாற்றறியாத என் சாற்றுங்களித்தாய்
தனிநடராஜ என் சற்குரு மணியே
(திருவருட்பா.)

ஹே உமாபதே! எமது முயற்சி பயனுடையதாகுக. எமது அரசனது செல்வக்குழந்தைகளின் க்ஷேம சமாசாரத்தை எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய அறிவும், திறனும் எமக்குக் கருணையுடன் அளித்தருள்வாயாக. நீ தோன்றாத் துணைபுரிந்து அவர்களைக் காத்தருள்வாயாக.

ஜெகன்மோகன்: புண்யபாலன்:— அமாத்யரே! எங்கள் சகோதரியைக் காணாமல் எங்கள் மனம் கலக்கமுறுகின்றது. ஒரு பகல்கூட நாங்கள் பிரிந்திருந்து அறியோம். எப்பாடுபட்டோ எங்கள் உடன்பிறந்தாளையும் அவளது பணிப்பெண்களையும் மீட்டுவருகின்றோம். விடைதருக.

---

## மூன்றாம் அங்கம்—இரண்டாங்காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:— வீரவர்மா—விராடதேசாதிபதி; தந்தவக்ரன்—எயினர் தலைவன்; ஜெயபாலன்—விராடதேசாதிபதியின் சேனைத்தலைவன்; ஜெகன்மோகன், புண்யபாலன்—வீரவர்மாவின் இளவரசர்கள்; கரீம், குடுகுடுப்பைக்காரன்; விழியன், சேவகன்; லோசனா—வீரவர்மாவின் பட்டமஹிஷி.

இடம்:— காடு, மலை, நாடு முதலிய பல இடங்களிலும், வீரவர்மாவின் அரண்மனையிலும்.

காலம்:— காலை.

தாவகிச் சிரத்தினிற் சரண்வைத்தாடினோன்
பூவகிற் கரும்புகை போர்த்த பொற்குழன்
மாவகிர்க் கருங்கண்வெய் வாட்டுந்தோட்டுணைத்
தேவகி தனயனைச் சிந்தை செய்குவாம்
(குசேலோபாக்யானம்).

வீர்வர்மா:—தெய்வமே! ஐயோ!! நாட்கள் போய் வாரங்கள் கழிந்தனவே. என் கண்மணியைப்பற்றிய செய்தியொன்றும் தெரியவில்லையே! லோசனுவோ ஊணுறக்கமின்றி நாளுக்கு நாள் வாடி மெலிந்து போகிறாள். உன் திருவுளம் எப்படி இருக்குமோ! எல்லாம் உன் செயல். ஹே ஜகத் ரக்ஷகா! தீனபந்தோ!!

பொன்னார் மேனியனே! புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றையணிந்தவனே!
மன்னே மாமணியே! மழபாடியுள் மாணிக்கமே!
அன்னே! நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.

(தேவாரம்).

தந்தவக்ரன், ஜயபாலன்:— விராடதேசாதிபதியே! ஈ நுழையாத காட்டிலும், நாடு நகரங்களிலும், பெரிய ராஜகாங்களிலும் தேடிப்பார்த்தோம். நம் பெண்மணிகளைப் பற்றிய வரலாறு ஒரு சிறிதும் புலப்படவில்லை. நாங்கள் இதுவரையில் மேற்கொண்ட காரியத்தைச் செய்து முடிக்காமல் மீண்டதே இல்லை. என்ன செய்வோம். மகாராஜா! மன்னித்தருள்க. (தேம்பித்தேம்பி அழுகிறார்கள்). இனி நாங்கள் எவ்வித பதவியையும் விரும்போம். உண்ணோம். உறங்கோம். எவ்வித வாழ்க்கை நலனும் எமக்குத் துன்பமே தருவதாகும்.

அஞ்செழுத்தோதிக் திருநீறணிந்து உன் அடிக்கமலம்
நெஞ்சழுத்திக் தொண்டு செய்வதல்லால் மதியின்
பிஞ்சழுத்தும் சடையாரியநாத! பிறிது செய்யோம்
பஞ்சழுத்தும் பதத்தார் இன்பவாரி படியினுமே.

(திருக்கருவைக் கலித்துறையந்தாதி).

கங்காதரா! உன் திருவிளையாடலோ இது! ஏழைகளாகிய எங்கள்மீது கொஞ்சம் கருணை காட்டலாகாதா?

ஜேகன்மோகன், புண்யபாலன்:— அரசே! ஒரு ஆச்சரியம்! வங்க நாட்டரசன் அனங்கபாலனுடைய மகன் சுதர்சனன் என்பவனிடம் நாங்கள் குணமாலிகாவைப்பற்றிக் கேட்டபொழுது அவர் உற்சாகமாகவும் காணப்படவில்லை. எங்களைக் கடிந்தும் பேசவில்லை. ஏதோ ஆழ்ந்த யோஜனையில் இருப்பவர்போல் காணப்பட்டார். இரண்டு தடவை ஏதோ எம்மிடம் சொல்ல விரும்புவதுபோல் பாவனை செய்து பிறகு யாதொன்றும் எம்மிடம் சொல்லாமலே சும்மா இருந்துவிட்டார். (பிறகு இருவரும் தமக்குள்) நாகாபரணா! நீ அறியாததும் ஒன்று உண்டோ? நீ எங்கும் நிறைந்தவனென்றும், ஸர்வ வல்லமையுள்ளவனென்றும் உலகம் உன்னைக் கொண்டாடுகிறதே! நீ காலமறிந்து எமக்கு உதவி புரிந்து எமது சகோதரிகளின் வரலாற்றைத் தெரிந்துகொள்ளக்கூடிய வழி காட்டக்கூடாதா?

வானுக்குள் ஈசனைத் தேடும் மருளர்காள்!
தேனுக்குள் இன்பம் சிவப்போ? கறுப்போ?
தேனுக்குள் இன்பம் சிறந்திருந்தாற்போல்
ஊனுக்குள் ஈசன் ஒளித்திருந்தானே.

(திருமூலர் திருமந்திரம்).

என்றபடி நீ எமக்குள் மறைந்து நின்று துணைபுரிவாயாக. இதுவே எமது மிகவும் பணிந்த விண்ணப்பம்.

வீரவர்மா:— ஜெகன்மோகனு! நீ சொல்வதில் எனக்கும் ஒரு ஸந்தேகம் உண்டாகிறது. நல்லது இருக்கட்டும். என் கண்மணி குணமாலிகா எங்கேயாவது உயிரோடு இருக்கிறாள் என்ற செய்தி முதலில் தெரிந்தால் பிறகு அவளை எந்த உபாயத்தாலோ எளிதில் மீட்டுவர ஏற்பாடு செய்யலாம். கடவுள் துணை செய்வாராக!

கரீம்— குடுகுடு, குடுகுடு, குடுகுடு. தசைவருது, தசைவருது, நல்ல வாக்கு சொல்லடி, நல்ல வாக்கு சொல்லடி

பம்மக்காதேவி, நல்லவாக்கு சொல்லடி, கலங்காதே! கலங்காதே!! கலங்காதே. மயங்காதே! மயங்காதே!! மயங்காதே. கடுதாசுவருது! கடுதாசுவருது!! கடுதாசு வருது!!! சந்தோசமாகப் போவுது! சந்தோசமாகப்போவுது.

வீரவர்மா—லோசனா:— ஏய் விழியா! அந்தக் குடுகுடுப் பைக்காரனை இங்கே அழைத்து வா.

விழியன்:— (அரசனை நோக்கி) அரசே! தமது உத்தர வுப்படியே இதோ சென்று அவனை அழைத்து வருகின் றேன். (பிறகு வெளிவாயில் சென்று) ஐயா குடுகுடுப்பைக் காரரே! எமது அரசரும் அரசியும் தங்களை உள்ளே இட்டு வரச்சொன்னார்கள்; வாரும்.

கரீம்:— (தனக்குள் இன்று நரிமுகத்தில் விழித்தோம்; வருவது தானே வரும்.) மகாராஜாவுக்கு ஸலாம் வருது ஸலாம் வருது ஸலாம் வருது. மகாராணிக்கு ஸலாம்வருது ஸலாம் வருது ஸலாம் வருது.

நல்ல வாக்கு சொன்னேன் நல்ல வாக்கு சொன்னேன் ஸாயபு. நல்ல வாக்கு சொன்னேன் ஸாயபு. பகவதீ! பகவதீ!! பகவதீ!!! பம்மக்கா தேவி! பம்மக்கா தேவி!! பம் மக்கா தேவி!!! பயமில்லை—பயமில்லை—பயமில்லை. வந் திடும் வந்திடும் வந்திடும். நல்ல வாக்கு சொல்லடி பம்மக்கா தேவி! நல்ல வாக்கு சொல்லடி பம்மக்கா தேவி!!

லோசனா:— ஸாயபு! இந்த சால்வையைப் போர்த்திக் கொள். என் கண்மணி குணமாலிகா எங்கே இருக்கிறாள்? எப்பொழுது நான் அவளைக் காண்பேன்? நீ இவற்றுக்கு பதில் சொன்னால் நான் உயிரோடிருப்பேன். இல்லையேல் இன்னும் சில தினங்களில் என் உயிரை மாய்த்துக்கொள் வேன் என்பது நிச்சயம். (பிறகு தனக்குள்) கருணாகரா! புயலினால் அலைப்புண்டு தத்தளிக்கும் ஒரு மாலுமிக்குக் கரை தென் பட்டாற்போல் உன் கடாக்ஷவீக்ஷண்யத்தின்

பிரபாவத்தால் என் கண்மணி குணமாலிகாவைக் காணலாகாதா?

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்மிருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க்கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅநின்ற இத்தாவர ஜங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்!
மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்ய என் உள்ளத்து ஓங்காரமாய் நின்ற
மெய்யா! விமலா! விடைப்பாகா! வேதங்கள்
ஐயாவென ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே!

(என்று புலம்புகிறாள்) (திருவாசகம்)

**கரீம்:**— தாயே! நல்ல காலம் வருது. நல்ல காலம் வருது. நல்ல காலம் வருது. அடுத்த வெள்ளி வருது. புருஷனோட வருது, சந்தோசமா வருது. நல்ல வாக்கு சொல்லடி! நல்ல வாக்கு சொல்லடி!! நல்ல வாக்கு சொல்லடி!!! பம்மக்கா தேவி! நல்ல வாக்கு சொல்லடி!! பம்மக்கா தேவி நல்ல வாக்கு சொல்லடி!!! வங்கதேசம்! வங்கதேசம்!! வங்கதேசம்!!! கடுதாசு வருது! கடுதாசு வருது!! கடுதாசு வருது!!! சந்தோசமாகப்போவுது! சந்தோசமாகப்போவுது!! சந்தோசமாகப்போவுது!!! நல்ல வாக்கு சொன்னேன்! நல்ல வாக்கு சொன்னேன்!! நல்ல வாக்கு சொன்னேன்!!!

**வீரவர்மா:**— கரீம்! இந்தப்பொற் காசுகளை எடுத்துக் கொள். நீ சொன்னது உண்மையானால் நீயும் உன்னுடைய வம்சத்தாரும் தலைமுறை தலைமுறையாய் அடைந்து அனுபவிக்கக்கூடிய ஏராளமான நிலங்களை மான்யமாக விட ஏற்பாடு செய்கிறேன். (பிறகு தனக்குள்)

வாழையடி வாழையென வந்ததிருக்கூட்ட மரபினில்
யானொருவனன்றோ? வகையறியேன் இந்த,
ஏழைபடும் பாடுனக்குத் திருவுளச்சம்மதமோ?
இது தகுமோ? இது முறையோ? இது தருமந்தானோ?
மாழைமணிப் பொதுநடம் செய்வள்ளால்! யானுனக்கு
மகனலனோ? நீ எனக்கு வாய்த்த தந்தையலையோ?
கோழையுலகுயிர்த்துயரம் இனிப்பொறுக்கமாட்டேன்
கொடுத்தருள்மின் அருளொளியைக் கொடுத்தரு
ளிப்போதே.

(திருவருட்பா).

கரீம்:— மகாராஜாவுக்கு ஸலாம்! விடை தந்தருள்க இன்னும் இரண்டு திங்களில் வந்து கண்டுகொள்கிறேன். தயவு இருக்கவேண்டும். தங்கள் கவலைகள் விரைவில் நீங்கிச் சுகமுண்டாகும்.

---

## மூன்றாம் அங்கம் மூன்றாங்காக்ஷி.

---

நாடகபாத்திரங்கள்:— வீரவர்மா விராடதேச மன்னன்; ஸுபுத்தி, கண்டகர் வீரவர்மாவின் மந்திரிகள்; வாயுவேகன் விராடதேசாதிபதியின் தூதன்; லோசனை வீரவர்மாவின் பட்ட ராணி; காவலாளர் சமயோஜிதம்.

இடம்:— விராடதேசாதிபதியின் அரண்மனை.

காலம்:— மாலை.

ஒரு திடந்தான் கதிக்கண் உய்க்கு மெனச் சொல்ப
கருதிடம் தான் அவன் காமர் குலத்தான்
பொருதிடம் தானவர் பொன்ற அமர்த்தான்
மருதிடந்தான் அடியவா.

(குசேலோபாக்யானம்.)

**ஸுபுத்தி:—** அரசே! நமது இளவரசன் ஜெகன்மோகன் சொன்னதையும் இந்த குடுகுடுப்பைக்காரன் சொல்வதையும் சேர்த்துப் பார்த்தால் நம் குணமணி குணமாலிகாவும் அவளது பணிப்பெண்களும் வங்கதேசாதிபதியின் பாது காவலில் தான் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆகையால் இனி சிறிதும் கவலை வேண்டாம்.

**கண்டகர்:—** அரசே! நம் தூதன் வாயுவேகனை அனுப்பி வங்கதேசாதிபதி மகன் சுதர்சனனை விசாரித்து உண்மையும் உளவும் அறிந்து வரச்செய்வோம் நரபதியே! தாங்கள் கலங்கவேண்டாம். அகிலாண்ட பூரணமாகிய ஆண்டவன் நமக்குத் துணையிருப்பான். அவனன்றி ஓரணுவும் அசையாதன்றோ? நாத சொரூபியானவனும் மனவாக்குக் கெல்லாம் அப்பாற்பட்டவனுமான அந்த ஸர்வபாபரணன் நமது மனக்குறையை நீக்கி நமக்குக் களிப்புண்டு பண்ணுவான். (பிறகு ஆகாயத்தை நோக்கி இருகைகளையும் உயர்த்தி)

அகர வுயிரெழுத் தனைத்து மாகி வேறாய்
அமர்ந்தென அகிலாண்டம் அனைத்துமாகிப்
பகர்வன வெலாமாகி அல்லதாகிப்
பரமாகி சொல்லரிய பான்மையாகி,
துகளறு சங்கற்ப விகற்பங்களெல்லாம்
தோயாத அறிவாகிச் சுத்தமாகி
நிகரில் பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்.
(என்று வாயார வாழ்த்தி மகிழ்ந்தான்)

(தாயுமானவர் பாடல்.)

**வீரவர்மா:—** மந்திரிகளே! இது நல்ல யோஜனை. அப்படியே செய்வோம். (வாயுவேகனை நோக்கி) வாயுவேகா!

நீ வங்கதேசம் சென்று நமது பெண்மணிகள் அங்கு இருக்கின்றார்களா என்று அத்தேசாதிபதி அனங்கபாலனையும் அவனது மகன் சுதர்சனனையும் நேரிற்கண்டு கேட்டுத் தெரிந்து கொண்டுவா.

வாயுவேகன்:— அரசே! நமஸ்கரிக்கின்றேன். தமது ஆக்கினையைச் சிரத்தாற்கொண்டேன். சென்று நல்ல செய்தி கொண்டு விரைவில் மீள்வேன்.

வீரவர்மா:— வாயுவேகா! உன் முயற்சி நன்முயற்சியாகுக; ஈசனருளால் என் மனக்குறை நீங்குக. விரைவிற் சென்று மீள்வாயாக. உன் மாட்டு நான் என்றும் நன்றியுடையேன்; நீ இச்சமையம் என் மனக்கவலையை நீக்குவாயேல் நீயே என் உயிரை அளித்தவனாவாய்.

லோசனா:— ஈசா! உன் திருவிளையாடலோ இது! நான் ஒருவர்மனம் நொந்திட ஏதும் செய்தறியேன். என் குறையை நீக்கி என்னை ரக்ஷிக்கக் கூடாதா? சரணாகத வத்ஸலா! வாயுவேகன் நல்ல சமாசாரம் கொண்டு மீள்கின்றானோ பார்ப்போம் ஈசா!! எல்லாம் உன் செயலே!!! ஏது என் துயரமும் நீங்குமா ஈசா! பார்வையிழந்தவன் அதை மீளவும் பெற்றது போலவும், மாண்டவர் பிழைத்தது போலவும் என கண்மணி குணமாலிகா உயிரோடு என் கண்ணிற் பட்டால் அது உலகுக்கு ஒரு அதிசயமேயாகும்.

கண்டகர்:— (தனக்குள் கடவுளைத் தியானஞ்செய்து கொண்டு) லோகானுகூலா! அரவிந்த நேத்ரா!! ஸர்வ ஜன ரக்ஷகா!!! எங்கள் அரசர் பெருமான் கவலையை நீக்குதல் உனக்கு ஒரு பாரமாகுமோ? எனதரிய மன்னர் பெருமாட்டி படுந்துயரை நீக்குதல் உனக்கு அரிதோ? எல்லாம் உன் திருவருள். அனாதை ரக்ஷகா!! உன் பாதங்களைப் போற்றுகின்றேன்.

காவலாளர்:— (வீரவர்மாவை நோக்கி) மன்னர் பிரானே! எங்கள் முயற்சியாவும் பாலைவனத்தில் பெய்த மழைபோலாயின. எங்கள் உள்ளங்கால்களில் வெள்ளெலும்பு வெளிப்பட்டு விட்டன. ஊணின்றி உறக்கமுமின்றி எம்மவரில் பன்னிருவர் வாடி உடல் மெலிந்து வழியில் மாண்டனர். தேவரீரது செவிக்கு நல்விருந்தாக நல்ல சமாசாரம் அறிந்து வந்து சொல்லுவதற்கு ஈசன் எமக்குத்துணை புரியாததையெண்ணி எங்களிற் பதின்மர் மலையில் மோதிக் கொண்டும் ஆழ்ந்த கடலில் விழுந்தும் தம்முயிரை மாய்த்துக்கொண்டனர். எங்கள் உடல் பொருள் ஆவியாவும் தம்முடைய அடைக்கலம். தமது திருவுளப்படி எங்களைச் சிக்ஷிப்பதோ அல்லது ரக்ஷிப்பதோ செய்தருள்க.

வீரவர்மா:— காவலாளர்களே! உங்களை நோவதிற் பயனென்ன? விதியைநோவதல்லால் வேறென்செய்வது? உங்களைச் சிக்ஷிப்பதால் என் கண்மணியை நான் காணப்போகிறேனா? ஏதோ கோபம் கரைகடந்து என் அறிவையும் மயக்கி எழும்பியதால் நான் உங்களைக் கடிந்து பேசினேன். குழந்தை குணமாலிகாவைத் தேடிய முயற்சியில் இம்மண்ணுலக வாழ்வை நீத்தவர்களுக்காக நான் மிகவும் வருந்துகின்றேன். அவர்களுடைய குடும்பத்தார்களுக்கும் என்னுடைய அனுதாபத்தைத் தெரிவிக்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். நீங்கள் சென்று உங்கள் கடமைகளைச் சிரத்தையுடன் செய்து கொண்டிருங்கள்.

காவலாளர்:— மன்னர் மன்னரே! தேவரீர் நீடூழி வாழ்க. தங்கள் மனத்துயர் விரைவில் நீங்குக; தமது நெடிது வாழ் மக்கள் தமக்குக் களிப்பு உண்டாக்குக; நாங்கள் விடைபெற்றுக் கொள்கின்றோம்.

(மூன்றும் அங்கம் முற்றிற்று.)

## நான்காம் அங்கம் முதற்காக்ஷி.

---

**நாடகபாத்திரங்கள்:—** *சுதர்சனன் வங்கநாட்டதிபதியின் இளவரசன்; தந்தவக்ரன் வேடர்தலைவன்; வாயறு விதூஷகன்; பிரஜண்டவீர்யன் வங்கதேசாதிபதியின் சேனாதிபதி.*

**இடம்:—** *அனங்கபாலனது அரண்மனையின் முன்புறம்.*

**காலம்:—** *வைகறை.*

*காமர் நறு விரைத்துளபக் கண்ணியனைப் புண்ணியனை*
*மாமகள் தன் கொழுநனை வழுத்துவீர் மானிடர்காள்*
*மாமகள் தன் கொழுநனை வழுத்துவீர் ஆமாகில்*
*தாமரைப் பெருமுதலும் சாரற்கரிய கதிசார் வீரே!*

(குசேலோ பாக்யானம்)

**சுதர்சனன்:—** (தனக்குள்) தெய்வமே! உலகம் என்ன மூட நம்பிக்கையுள்ளதாய் இருக்கிறது! கடவுளுக்கு உலகுயிரனைத்தும் அவர் தம் மக்களேயாகுமன்றோ!! தமது மக்களுள் ஒருவரைக் கொன்று தமக்குப் பலியிடும் அறிவிலிகளிடம் கடவுள் கருணை கொள்ளுவாரா? ஒருநாளும் மாட்டார். இந்தப் பலியிடும் நம்பிக்கை உலகில் எப்பொழுது குறையுமோ? கொடிது! கொடிது!! வாயில்லாப் பிராணிகளைத் தமது ஊன் பெருக்கற்கே பெரிதும் பலியிட்டு அவற்றின் ஊனை விரும்பித் தின்கின்றனர். ஈசா! இவ்வியல்புள்ள மாந்தர்க்கு நல்லறிவு ஊட்டுவாயாக.

*கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி*
*எல்லாவுலகும் தொழும்*

என்ற பொய்யா மொழிப்புலவர் வாக்கும் “ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே” என்ற இனியவை நாற்பதின் கட்டுரையும் நோக்கற்பாலன.

**தந்தவக்ரன்:—** அரசிளஞ்சிங்கமே! அநேக வந்தனம். ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறீர்களென்று எண்ணுகிறேன். ஆயினும் நான் மிகவும் பணிந்து தெரிவித்துக் கொள்வதைச் சிறிது செவியேற்கவேண்டுகிறேன். இளவரசே! நேற்று இரவு வெகு உல்லாசமாய்க் கழிந்தது. ஆனால் தங்களைக்காணாமையால் அடிக்கடி சிறிது கவலைக்கும் இடம் ஏற்பட்டது.

**சுதர்சனன்:—** கலைவா! உன் கேள்விக்கு பதில் தக்கபடி சொல்லுகின்றேன். சற்றுப்பொறு. (ஸாயணனைக்காட்டி) அவன் சொல்வதைக் கவனி.

**தந்தவக்ரன்:—** இளவரசே! அவன் உல்லாசமாய்ப் பேசுந்தன்மையன். ஆயினும் சிறிதும் முறை தவறாமலும் நியாயந்தவறாமலும் உலக அனுபவத்தை யொட்டியே பேசுவான். அவனது ஆற்றலும் சொல்வன்மையும் நான் நன்கு அறிவேன்.

**ஸாயணன்:—** தெய்வமாதுண்ணுது ஆட்டையும் கோழியையும்? தெய்வத்துக்குக் காட்டி மனுசன் தின்பதுதான் உலக வழக்கம். தெய்வம் துண்ணு ஆட்டில் ஓட்டிய தாசியே அதண்டே காட்டினாங்களா? ஒவ்வொருத்தன் பப்பத்து முயலும் ஒரோரு பீப்பா தண்ணியும் ஒளிச்சிருக்கான்வ.

**சுதர்சனன்:—** தந்தவக்ரா! நண்பன் ஸாயண சொல்வது முற்றும் உண்மையே. சென்ற இரவு சில திருடர்களைச் சந்திக்க நேர்ந்தது. அவர்களிடம் அழகிலும், குணத்திலும், அறிவிலும் சிறந்த மூன்று பெண்மணிகள் சிக்கிக் கொண்டனர். அக்கள்வரோடு போர்புரிந்து அவர்களைக் கொன்று அப்பெண்மணிகளை எமன் வாயினின்றும் மீட்டுக்

கொண்டு வந்தேன். இன்னும் நான் வேட்டைக்குச் சென்று திரும்பிய செய்தியை என் தந்தையிடம் சொல்லவில்லை. ஆகையால் நடந்தவற்றைத் தந்தையிடம் விண்ணப்பம் செய்து விரைவில் மீள்வேன்.

பிரஜண்டவீர்யன்:— சுதர்சனா! நீ நீடூழி வாழ்வாயாக. நீ உத்தமமான சுத்த வீரன். உன் கீர்த்தி இவ்வுலகுள்ளளவும் நிலைபெற்று நிற்கும். உனது வீரச்செய்கைகளைப் பற்றிச் சிறிது கேழ்விப்பட்டேன். உருவும், இளமையும், உட்கும் உன்னிடம் ஒருங்கே அமைந்துள்ளன. நீ ஈசனருளால் நல் வாழ்வு பெறுவாயாக (உட்கு=பகைவர் அஞ்சத் தக்க மதிப்பு).

தந்தவக்ரன்:— வீரசிங்கமே! தாங்கள் தரணி முழுவதையும் ஒரு குடைக்கீழ் அடக்கி ஆளக்கூடிய வன்மையும் அறிவும் பெற்றிருக்கிறீர்கள்.

அறக்கடல் நீயே! அருட்கடல் நீயே!
அருங்கருணைதான் நீயே!
திறக்கடல் நீயே! திருக்கடல் நீயே!
திருந்துளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே! நிகர்கடந்துலகில்
நிலையும் நீ உயிரும் நீ நிலைநான்
பெறக்கடல் நீயே! தாயும் நீ எனக்குப்
பிதாவும் நீ அனைத்தும் நீயன்றோ?
(தேம்பாவணி)

(என்று புகழ்கின்றான்)

## நான்காம் அங்கம்—இரண்டாங்காக்ஷி.

நாடக பாத்திரங்கள்.— சுதர்சனன் அனங்கபாலனுடைய இளவரசன்; அனங்கபாலன் வங்கதேசாதிபதி;

ஸாயனு விதூஷகன்; வனஜா வங்கதேசாதிபதியின் பட்டமஹிஷி.

இடம்.— வங்கதேசாதிபதியின் அரண்மனை.

காலம்.— காலை.

மாதர்களின் வருந்தாமே போதமறப்புரிந்திடுவீர்
சீதமலர்த்திருமார்பன் கோதறு சீர்குறிப்பீரே.
மங்கையரின் வருந்தாமே பொங்கமறப்புரிந்திடுவீர்
செங்கமலத்திருமார்பன் கொங்கலர்சீர் குறிப்பீரே.
வனிதையரின் வருந்தாமே புனிதமறப்புரிந்திடுவீர்
கனிமொழிச் செந்திருமார்பன் இனியசீர் குறிப்பீரே.

( குசேலோபாக்யானம் )

சுதர்சனன்:— (அனங்கபாலனை நோக்கி) தந்தையே! தங்கள் உத்தரவைச் சிரமேற்கொண்டு, எயினர் படைத்தலைமை பூண்டு, காட்டைக் கலைத்து வேட்டையாடி நமது தேச மக்கள் இன்னல் தீர்த்தேன். பின்னர் குணமாலிகா என்ற விராடதேசாதிபதி மகளும் அவளது பணிப்பெண்கள் இருவரும் சில கள்வர்களால் காளி ஸந்நிதியில் பலியிடப்படுவதற்காக நிறுத்திவைக்கப்பட்டிருந்ததைக் கண்டு அவர்களை மீட்டு வந்து அவர்கள் விருப்பப்படி நமது அந்தர்முகியாற்று வடகரையிலுள்ள மாளிகையில் அவர்களை வசிக்கச்செய்திருக்கிறேன். குற்றம் உளதேல் பொறுத்தருள்மின்.

அனங்கபாலன்:— இளவரசே! ஒரு மகாநதி பெரியதோர் சமுத்திரத்திலேயே போய்க் கலக்கும். அதேபோல் என் கான்முளையாகிய நீயும் தகுதியுள்ளதே செய்தாய். ஆயினும் அப்பெண்மணிகளை அவர்களது தந்தை இல்லம் சேர்த்துவிடவேண்டியது நமது கடமையல்லவா?

"அஞ்சுவதஞ்சாமை பேதைமை யஞ்சுவ தஞ்சலறிவார்
தொழில்"
"தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணுவார்"

என்ற திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்துள்ள குறளிணைப்பாக்கள் மறக்கற்பாலனவோ?

சுதர்சனன்:— தந்தையே! மன்னித்தருள்க. அடியேன் தமது ஸந்நிதியில் விண்ணப்பித்துக்கொள்ள எண்ணியதும் அதுவே. தயைகூர்ந்து அதற்குக் காலமும் வழியும் ஆராய்ந்து அறிவிக்க வேண்டுகிறேன். பிதாவே! குணமாலிகா தன் தந்தையின் நன்கு மதிப்பைப் பெற்றவள். ஆயினும் தந்தை தன்னைக் கோபித்துக்கொள்வாரோ என்ற அச்சம் மிகவும் கொண்டுள்ளாள். அவள் அப்படி எண்ணுவது மதியீனம். தமது செல்வப் புத்திரியை விட்டுப் பிரிந்திருக்கும் அப்பெண்மணியின் தாய் தந்தையரின் மனம் ஆலையிலகப்பட்ட கரும்பைப்போலவும், மத்தினிடைப்பட்ட தயிர் போலவும் குழம்பித் தத்தளித்துக்கொண்டிருக்குமல்லவா? அம்மாது சிரோமணிக்கும் அவளது தோழிப்பெண்களுக்கும் தேறுதல் சொல்லி அவர்களைத் தத்தம் இல்லம் சேர்ப்பித்தல் நமது கடமையாகும். தந்தையே! தங்கள் சித்தப்படி நடந்துகொள்ளத் தயாராய் இருக்கிறேன்.

ஸாயணு:— தந்நானே என்பதெல்லாம் பாட்டுக்கடி. பையன் கண்ணாலம் பண்ணிக்க வழி தேடிக்கிட்டான். இந்தக்காலம் பெரியவங்களைக் கேட்டுச் செய்யாகாலமா?

அனங்கபாலன்:— சுதர்சனு! அம்மங்கை குணமாலிகா அறிவிற்சிறந்த நங்கைதானு? கல்வியறிவும் கட்டழகும்

பொருந்தியுள்ளனளா? உத்தம மங்கையர்க்குரிய உயர் குணங்கள் அனையவும் பொருந்தியுள்ளனளா? அவளது குடிப்பெருமையும், குலப்பெருமையும் நான் சிறிது அறிவேன். திருவுளச்சம்மதமும் பொருந்தின் அவளையே நீ உன் வாழ்க்கைத் துணைவியாகப் பெறலாம் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

சுதர்சனன்:— தந்தையே! குணமாலிகாவின் ரூபலாவண்யங்களை ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷனாலும், வருணிக்கமுடியாது. அவள் ரூபத்தில் பூமகள், கல்வியில் நாமகள். தேரோட்டுவதிலும், வாகனப்பயிற்சியிலும் அஸ்திர, சஸ்திரப் பிரயோகங்களிலும் மகா சாமர்த்தியமுள்ளவள். ஆத்மானந்தரிடம் அர்த்த சாஸ்திரம், கணித சாஸ்திரம், இதிகாஸம், புராணம், வேதம், வேதாங்கம், ஸ்ருதி, ஸ்மிருதி, உபநிஷத்துக்கள், தர்க்கம், வியாகரணம், முதலியவற்றை ஐயந்திரிபறக்கற்று ஆயுதப்பயிற்சியிலும், சிறந்து விளங்குபவள்.

அனங்கபாலன்:— மைந்தா! ஈசன் திருவருளும், உனது விருப்பமும், அம்மங்கையின் நோக்கமும், விராடதேசதிபதியின் அபிப்பிராயமும் கூடுமேல் நான் இம்மணம் இனிது முடித்து மகிழ்வடையலாமென்று எண்ணுகிறேன்.

கருமம் சிதையாமே கல்வி கெடாமே
தருமமும் தாழ்வுபடாமே—பெரிதுந்தம்
இன்னலமும் குன்றுமே ஏரிளங்கொம்பன்னார்
நன்னலந்துய்த்தல் நலம். (நீதிநெறி விளக்கம்).

என்பது என்னுடைய விருப்பம்.

வனஜா:— பிராணநாதா! தமது இன்னுயிரன்ன பேரழகும், இளமையும் வாய்ந்த செல்வக்குமரியைக் காணுமல் வருந்தும் அப்பெண்மணியின் பெற்ருேர்களின் மனத் துயரம் எத்தகைமைத்தோ? அவர்கள் எங்கெங்கு தேடுகின்றனரோ? எவ்வாறு கதறிக்கொண்டு கன்றையிழந்த தலையீற்றுப் பசுவைப்போல் தவிக்கின்ருர்களோ? ஒரு நொடிப்பொழுதும் இனி வீணே கழிவதற்கிடமின்றி இப் பெண்மணிகளின் உடல் நலத்தை விராடதேசாதிபதிக்கு அறிவித்தல் நமது கடமையாகும். இல்லையேல் உலகம் நம்மை நிந்திக்கும். நமது செல்வக்குமரன் பெருமையும் மங்கும். விராடதேசாதிபதியின் சீற்றத்துக்கும் ஆளாவோம் ஆதலால் இது நமது முதற்கடமை என்பதைத் தமது திருமுன் மிகவும் வணங்கித் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நிற்க நாதா! நம்மைந்தன் சுதர்சனன் தனது வீரத்தையும், அறிவின் திறத்தையும் உலகமறியச் செய்து மேன்மையும் கீர்த்தியும் பெற்று விளங்குகிருன். நிறைந்த கல்வியும், மிகுந்த வனப்பும், உயர்குணங்கள் பலவும், அளவற்ற செல்வமும், திட சரீரமும், போர் செய்யும் படைக் கலப்பயிற்சியுமுள்ள குணமாலிகாவை அவளது தந்தையின் அனுமதி பெற்று நம் செல்வக்குமரன் மணப்பதால் நமக்குப் பெருமையே உண்டாகும். கடவுள் திருவுளம் எப்படியிருக்குமோ? குணமாலிகாவின் மனப்பான்மையும், நமது செல்வக்குமரனை மணப்பதில் நாட்டமுள்ளதாயிருக்குமென்று எண்ணுகிறேன்.

ஜயது ஜயது தேவோ தேவகி நந்தனோயம்!
ஜயது ஜயது கிருஷ்ணோ விருஷ்ணி வம்சப்ரதீபக!
ஜயது ஜயது மேகச்யாமள கோமளாங்கோ!
ஜயது ஜயது பிருத்வீ பாரநாசோ முகந்தக.

## ஐந்தாம் அங்கம்—முதற்காக்ஷி.

நாடக பாத்திரங்கள்:— குணமாலிகா—வீரவர்மாவின் இளவரசி; அம்புஜா, விமலா—குணமாலிகாவின் பணிப் பெண்கள்; ஸாயணு—விதூஷகன்; சுதர்சனன்—வங்கநாட்டு இளவரசன்.

இடம்:— வங்கநாட்டில் அந்தர்முகி ஆற்றங்கரையி லுள்ள மாளிகை.

காலம்:— மாலை.

பூமேவு நான் முகத்தோன் போற்றித் துதிப்பதுவும்
தேமேவு பைந்துளவம் சேரக் கமழ்வதுவும்
மாமேவு மாமறைகள் வாழ்த்தப் பொலிவதுவும்
தாமேவு வஞ்சச்சகடம் உதைத்ததுவும்
தீமேவும் ஆரணியம் சென்று திரிந்ததுவும்
தூமேவும் அன்பருளம் தோன்றப் பயில்வதுவும்
பாமேக வண்ணன் பதம்.

சுதர்சனன்: — (குணமாலிகாவை நோக்கி) பெண்ணர ணங்கே! குணமாலிகா!! உன்னை உன் தந்தையில்லம் விரைவில் சேர்ப்பேன். நீ கவலை தவிர்தி. இது தக்க காவலுள்ள இடமாகையால் உனக்கும் உன் பணிப்பெண்களுக்கும் யாதொரு தீங்கும் நேராது. இங்குள்ள பொருள்கள் யாவும் உன்னுடையவைகளே. நான் சில தினங்களில் வந்து காண் பேன். ஜாக்கிரதையாய் இருப்பாயாக.

குணமாலிகா.— இளவரசே! அடியேன் விண்ணப்பத் தைக் கேட்டருள்க. நான் கற்ற முட்டாளாய், என் பெற்

ற்றோரும், உற்றோரும், மற்றோரும் கவலைப்படும்படியாகவும், உலகம் என்னை நிந்திக்கும்படியாகவும் நடந்துகொண்டுவிட்டேன். ஆகையால் எனது பெற்றோர்கள் என்னைத் தேடி வந்தாலன்றி நான் செல்லத் துணியேன். இவ்விடத்திலேயே ஊண் உறக்கமின்றி உயிரை மாய்த்துக்கொள்வேன். இது சத்தியம்.

சுதர்சனன்:— பெண்ணே! உனக்கு என்ன பித்தமா? என்னவோ பிதற்றுகிறாயே! நீ தோஷமற்றவள் எனபதை உன் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் தெரியும்படி செய்து உன்னை உன் தந்தையிடம் சேர்ப்பிப்பேன். அஞ்சற்க:

குணமாலிகா:— இளவரசே! தாங்கள் சொல்வது பொருத்தமுடையதே. ஆயினும் என்மனம் அஞ்சுகிறது.

சுதர்சனன்:— அன்ன நடையாளே! சந்திரனுக்குண்டோ உன் முகப்பொலிவு? வெருண்ட மான் கண்ணும், நீலோத்பல இதழும் உனது கண்களுக்கொப்பாகுமா? உன் குறலோசையைக் கேட்டுக் குயிலினங்கள் மரக்கிளைகளில் நாணி மௌனமாய் இருக்கின்றனவே! நீ உன் உயிரை மாய்த்துக்கொள்ள நான் சகிப்பேனோ?

குணமாலிகா:— தயாநிதியே! என் மனப்பான்மையை முற்றும் காட்டிக்கொள்ள எனக்குத் தற்காலம் சுதந்திரம் இல்லை. தமது திரண்ட புயங்களும், விரிந்த மார்பும் அஞ்சா நெஞ்சமும், இனிய வசனமும், எழில் நல மிகுதியும், அரச பதவியும், அளவற்ற செல்வமும், கலையில் தெளிவும் எவ்வாறு ஸ்திரீகளின் மனத்தைக் கவராமல் இருக்க முடியும்?

சுதர்சனன்:— அமிழ்தினும் இனிய தேன்மொழி யாளே! எல்லாம் ஈசன்செயல்.

நல்வினையடைந்தகாலை நனிநலம் திளைப்பர் நன்மை
அல்வினையடைந்தகாலை அல்லலில் துளைவரெல்லாம்
தொல்வினை வழியதாகும் தோன்றனுபவங்கள் தந்தம்
புல்வினையாலென் றெண்ணல் புலமையோர் இடத்தின்
தாமால்.

(குசேலோபாக்யானம்.)

இது உலக இயற்கை. அன்று எழுதியவாறே ஆகும். இது பற்றியே "எழுதியவாறே காண் இரங்கு மடநெஞ்சே! கருதியவாராமோ கருமம்?" என்றார் பிறரும். நான் போய் வருகிறேன். விரைவிற் சில நாட்களில் மீள்வேன்.

குணமாலிகா:— (தனக்குள்) ஈசா! நீ தோன்றாத் துணையாயிருந்து எனக்குச் செய்த உதவியின் பெருமையை என்னென்று புகல்வேன? "உரலிலகப்பட்டது உலக்கைக் குத் தப்புமா" என்பது ஓர் முதுமொழியேயாயினும் இந்த மகானுபாவன் சுதர்சனன் அதைப் பொய் மொழியாக்கி என்னைக் கள்வர் கூட்டத்தாரிடமிருந்து மீட்டு ரக்ஷித்தான். (சுதர்சனன் வருகின்றான்—குணமாலிகா அஞ்சலி செய்து தலை குனிந்து நிற்கின்றாள்.)

அம்புஜாக்ஷி:— தாயே! அந்த ஸர்வோத்தமனை நாம் எவ்வளவு புகழ்ந்தாலும் அப்புகழுரையனைத்தும் வெற்றுரை யேயாகும். நம்புகழ்ச்சி அவரது வீரச்செய்கைக்கு எம்மட் டாகும்? கடவுளே! சுதர்சனன் நீடூழிவாழ்க அவரது நாடு நீர்வளம், நிலவளம், குடிவளம், சேனை வளம், செல்வ வளம் எல்லாவற்றிலும் உயர்ந்து விளங்குக.

**விமலா:**— தோழீ! கொட்டிக்கொட்டி அளந்தாலும் குருணி பதக்காகுமா? நாம் எவ்வளவு அவ்வுத்தம வீரசிங்கம் சுதர்சனனைப் புகழ்ந்தாலும் அது அவரது வீரச்செய்கைக்குப் போதுமானதாகுமோ?

**குணமாலிகா:**— சஹோதரிகளே! நம் தந்தை நம்மை ஏற்றுக்கொள்ளுவாரோ? அல்லது வெகுண்டு தள்ளிவிடுவாரோ?

**அம்புஜாக்ஷி:**— அன்னாய்! ஏன் அப்படித் தங்களுக்கு அவரிடம் ஸந்தேகம் உண்டாகிறது? அவர் என்ன தம்மிடம் அன்பில்லாதவரா?

**விமலா:**— தேவீ! தங்களுக்கு ஏன் இப்பொழுது, என்றும் ஏற்படாத இந்த ஸந்தேகம் ஏற்பட்டது?

**குணமாலிகா:**— சஹோதரிகளே! நமக்கு ஏற்பட்ட துன்பம் முழுதும் நம்முடைய மூடத்தனத்தாலன்றோ? அப்படியிருக்க அவருக்கு நம்மிடம் எப்படி அன்பு உண்டாகும்? அவர் இனி நம்முகத்திற்கூட தென்படமாட்டாரோ என்று என் மனம் அஞ்சுகிறது. ஏனெனில் இப்பொழுது சுமார் மூன்று வாரமாய் இந்தத் தனிமையான மாளிகையில் வசித்துவருகின்றோம். நம் தந்தையாவது சஹோதரர்களாவது நம் நாட்டுத்தூதர்களாவது நம்மைத் தேடிவரவில்லை. அதுவே என் மனதுக்கு அதிக கவலைக்கிடந்தருகிறது

**அம்புஜாக்ஷி:**— தாயே! நாம் நிர்மானுஷ்யமான இந்த மாளிகையில் வசிக்கிறோம். நாம் இங்கிருப்பது சுதர்சனன் ஒருவனுக்குத்தான் தெரியும். அவரும் நம்மை இங்கே

ஜாக்கிரதையாய்க் கொண்டுவந்து சேர்த்த நாள் முதல் திரும்பவும் வரவில்லை. ஆனால் இன்னும் வருஷக்கணக்காய் நாம் இங்கே தங்கியிருக்கினும் ஊண் உறையுள் இவற்றுக்குக் குறைவின்றி வேண்டுவனவற்றை இம்மாளிகையில் சேமித்து வைத்திருக்கிறார். அப்படியிருக்க நமது தந்தை வீரவர்மா நம்மீது கவலைகொண்டு நம்மைத் தேடுகிறாரென்றும், இல்லையென்றும் நம்மால் எப்படி சொல்லக்கூடும்? அவர் எங்கெங்கு தேடுகின்றாரோ? தமது அன்னை என்ன நிலைமையில் தவிக்கிறார்களோ?

**குணமாலிகா:**— தங்காய்! இப்படியே இன்னம் எவ்வளவு காலம் இங்கே கழிப்பது? நாம் நம்முடைய தாய் தந்தையரைக் காண்போமோ? மாட்டோமோ? ஐயோ! அந்த வெள்ளை ரோஜா வாடுமே! நான் வளர்த்துவரும் நாகணவாய்ப்புள் என்னைக் காணாததால் ஊண் உட்கொள்ளாமல் உயிர்விடுமே! என் அன்னை தம்முயிரை மாய்த்துக்கொள்வார்களே!

**ஸாயணா:**— குணமாலிகா! மானுக்காசைப்பட்டாயே! கலங்கிக் கலங்கித் தவிக்கிறாயே. பெண்ணென்றால் பேயும் இரங்கும். கவலைப்படாதே. கடவுள் உன்னைக் காப்பாற்றுவார். பயப்படாதே.

**விமலா:**— தாயே! சுதர்சனன் தம்மை மணம புரிந்து கொள்ளமாட்டாரோவென்று ஸந்தேகப்படுகிறீர்களா? அந்த ஆண்மகன் தங்களிடம் உண்மையான அன்புடையவன் என்பதை நான் அறிவேன், வருந்தாதீர்கள். அவன் நிசசயமாய்த் தங்களைக் கைவிடான.

கருங்கடன் மேய்ந்த கமஞ்சூல் எழிலி
இருங்கலி இருவரை யேறி உயிர்க்கும்
பெரும்பதக்காலையும் வாரார் கொல்வேந்தன்
அருந்தொழில்வாய்த்த நமர்

(பருவங்காட்டித் தோழி தலைமகளை வற்புறுத்தியது).

குணமாலிகா:— சகோதரி! சுதர்சனன் ஒரு சுத்த வீரனாகையால் அவன் தன் தோள்வலியும் மனோவன்மையுங் கொண்டு நம்மை மீட்டுப் பாதுகாத்தது உண்மைதான். அது காரணமாய் அவன் என்னை மணந்துகொள்வான் என்று நான் நம்பிக்கை கொள்ள முடியுமா? அப்படியே அவன் விரும்பினால் நான் எனது தாய்தந்தை எனது சுற்றத்தார் இவர்களின் ஸம்மதமின்றி அப்படிப்பட்ட ஒரு மணவினைக்குச் சம்மதிப்பதுதான் உலக நடைக்கும் நியாயத்துக்கும் பொருத்தமுடையதாகுமா? நீ அறியாதவளல்லள். நிதானமாய் யோசித்துப்பார்.

---

## ஐந்தாம் அங்கம்—இரண்டாங்காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:— வாயுவேகன்—விராடதேசாதிபதியின் தூதன்; அனங்கபாலன்—வங்கநாட்டதிபதி; (சுதர்சனன், வனஜா, பிரஜண்டவீர்யன், தனசேகரர், ஆரியோத்தமர் இவர்கள் வருதல்).

இடம்:— வங்கநாட்டதிபதியின் அரண்மனை.

காலம்:— பிற்பகல்.

வண்டாடு பூந்துளபமாலையனைவானோர்கள்
கொண்டாடும் சீர்த்தியனைக் கோவலர் பாடித்தெயிர்நெய்
உண்டாடு சீதரனை ஒப்பிலா அற்புதனைக்
கண்டாடுமன்பருளம் காதலிக்கும் புண்ணியனைக்
கொண்டாடுவன்றியெனச் சொல்லித் துதிமுழக்கி
ஒண்தாள் துணைக்கொண்டு உயர்வீர் உலகீரே!
(குசேலோபாக்யானம்)

வாயுவேகன்:— (அனங்கபாலனை நோக்கி) அரசே! தமக்கு ஸகல மேன்மைகளும் வாழ்க்கை நலன்களும் உண்டாகுக. நான் விராடதேசாதிபதி, வீரவர்மாவின் தூதன். என்னை வாயுவேகன் என்று பெரியோர் அழைப்பர். எனது அரசனது வேண்டுகோள் ஒன்றைத் தம் செவி மாட்டிச் செல்லவே இங்கு வந்தேன். தயைகூர்ந்து கேட்டு விடை தந்தருள்க.

அனங்கபாலன்:— வாயுவேகா! உன் வரவு நல் வரவாகுக. விராடதேசாதிபதி வீரவர்மாவும், அவர் தம் மக்களும் சுற்றமும் சுகமா? அவர் தம் நாடு பல்விதங்களிலும், செழித்து விளங்குகின்றதா? அறிவிலரும், இரவலரும் இல்லாத பெருமை அந்நாட்டுக்குத் தொன்றுதொட்ட நாளாய் உண்டு என்பதை என் முன்னோர்கள் சொல்லப் பன்முறையும் நான் கேட்டுள்ளேன்.

வாயுவேகன்:— மன்னர் மன்னரே! எவ்வகை வளனும் எம்மரசனுக்குக் குறைவில்லை. ஆனால் சில நாளாய் அவர் தம் செல்வக்குமரி குணமாலிகா என்ற, கல்வியும், இயற்கையழகும் வாய்ந்த பெண்மணியும் அவளது தோழிமார் இருவரும் காணமற்போயினர். அப்பெண்மணிகளைப் பலதிசைகளிலும் தேடி மனமுளைந்தனம். பின்னர் தூது சென்றவர்களும், குறி சொல்பவர்களும் அப்பெண்மணிகள் தற்காலம் இருக்கும் நாடு தம் நாடென்றே ஒருமனப்பட்டு ஒரே வாக்காய்ப் பலமுறையும் சொல்லுகிறபடியால் தம்மை நேரிற்கண்டு உண்மை தெரிந்துகொண்டு விரைவில் மீளும்படி எமது மன்னர் என்னை அனுப்பியுள்ளார். தமது மறுமொழி யாதோ? வணங்கிவேண்டுகிறேன்.

அனங்கபாலன்:— வாயுவேகா! உலகில் சம்பவங்கள் எவையும் நன்மைக்கே என்பது ஆன்றோர் துணிபு. நீ கவலை தவிர்தி. நும்மன்னன் மகள் குணமாலிகாவும் அவர் தம் பாங்கியரும் நம் நாட்டில் அந்தர்வாகினி நதியின் வடகரையில் அழகியதோர் மாளிகையில் சுகமே வாழ்ந்து வருகின்றனர். நான் இன்று அவர்களை ரதமேற்றித் தக்க பரிசுகளுடனும், படைத்துணைகளுடனும் நும்மரசனிடம் சேர்ப்பித்துவிடவேண்டுமென்று இன்று கலைவல்லார்களைக் கொண்டு நன்னாளும், நல் முகூர்த்தமும் குறிப்பிட்டிருக்தேன். நல்லவேளைக்கு நீயும் வந்தாய். எல்லாம் தெய்வச் செயல். நம் செயலால் ஆவது ஒன்றுமில்லை.

(சுதர்சனன், வனஜா, பிரஜண்டவீர்யன், தனசேகரர், ஆரியோத்தமர் அனைவரும் வருகின்றனர்.)

வாயுவேகன்:— அரசே! இன்றே சுதினம். நான் ஓடோடியும் சென்று எனது மன்னர்பிரான் வீரவர்மாவுக்கு இந்நற் செய்தியை யறிவித்து விரைவில் எம்பரிஜனங்களுடனும் நால்வகை வாச்சியங்களுடனும், சதுரங்க சேனைகளுடனும் வந்து எமது ஸ்திரீ ரத்னங்களை இரதமேற்றிச் செல்வேன். எமது நாடு இனி என்றும் நுமக்கும், நும் குலத்தவர்களுக்கும் மிகவும் நன்றிபாராட்டற்குக் கடமைப் பட்டுளது.

---

## ஐந்தாம் அங்கம்—மூன்றும் காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:- வீரவர்மா—விராடதேசாதிபதி; லோசனை—அம்மன்னனது பட்டமஹிஷி; வாயுவேகன்—அம்மன்னனது தூதன்; ஸு—புத்தி, கண்டகர்—மந்திரிகள்.

இடம்:—விராட தேசாதிபதியின் அரண்மனை.

காலம்:— காலை.

*வேதியாய் வேதவிளை பொருளாய் வேதத்தின்*
*நீதியாய் நீதிநெறிகடந்த நீள்ஒளியாய்*
*ஆதியாய் ஈறாய் நடுவாய் அவைகழிந்த*
*சோதியாய் நின்றாய் என் சோதனைக்கோ?*
*நின்னியல்பே!*

(திருவிளையாடற்புராணம்.)

வீரவர்மா:— ஜகதீசா! வாயுவேகன் சென்றும் தாமதமா? இன்னும் என் மனத்துயர் நீங்கும் அந்நநாள் கூடிற்றில்லைபோலும்! இனி உடலில் விருப்பம் வைப்பதிற் பயனில்லை. லோசனையோ இன்னும் இரண்டொரு நாள்கூட ஜீவித்திருக்கமாட்டாள் என்று ஸந்தேகப்படுகிறேன்.

வாயுவேகன்:— பிரபோ! கண்டேன் குணமாலிகாவை கொண்டேன் ஆனந்தம். ஒழிமின் கவலைகளை! எழுமின் ரதமேறி.

வீரவர்மா:— எனதாருயிர் நண்ப! நீயே என்னுயிரை அளித்தவனாவாய். நீ நீடூழி நின் மனைவி மக்கள் சுற்றத்தாருடன் சிறக்க வாழ்வாயாக. இந்நற் செய்தியை எனக்கு அறிவித்ததற்கு இப்பொற் குவியல்களைப் பெறுவாயாக. ஈசா! இது என்ன நினைவா? அல்லது கனவா? ஹா குணமாலிகா! என் கண்மணி! உன் சந்திரவதனத்தைக் காணேனே! என்ன வாயுவேகா! நான் பெண்ணை உயிருடன் பறி கொடுத்தேனே! எங்கே குணமாலிகா! ஹா குணமாலிகா!! குணமாலிகா!!!

லோசனை:— வாயுவேகா! கண்டாயா கண்மணிகளை? ஏன் அவர்கள் உன்னுடன் வரவில்லை? (அழுகிறாள்).

வாயுவேகன்:— அம்மணீ! துயர் தவிர்மின்! நமது பெண்மணி வங்கதேசாதிபதி அனங்கபாலனுடைய நாட்டில் ஒரு தனிமையான மாளிகையில் சுகமே வசித்து வருகின்றாள். அம்மன்னரது செல்வப் புதல்வன் சுதர்சனனே நம் கண்மணிகளைக் கள்வர் கூட்டத்தினரினின்றும் காப்பாற்றிய வீரசிங்கமாவான்.

ஸுபுத்தி, கண்டகர்:— ஜெயபாலா! சீக்கிரம் நமது படைகளை அணிவகுத்து நிறுத்துவாயாக. நால்வகை வாச்சியங்களும் முழங்க ஆடை ஆபரண அலங்கார பூஷிதர்களாய் நாம் ரதமேறிச் சென்று வங்கதேசமடைந்து, அத்தேசாதிபதிக்கும், அவர் தம் செல்வக் குமரன் சுதர்சனனுக்கும் நம் வந்தனங்களையும், காணிக்கைகளையும் அளித்து நம் செல்வக்குமரிகளை மீட்டுவருவோம். சீக்கிரமே புறப்பட எல்லாம் சித்தம் செய்வாயாக.

வீரவர்மா:— மந்திரிகளே! இவ்வாண்டு நம் நாட்டில் இறை தவிர்த்திடுக. ஆலயம் புதுக்குக. வீதிவாய் மகர தோரணங்கள் கட்டி நாட்டை அழகு பெறச் செய்க. ஆதுலர்க்கும், அந்தணர்க்கும் பொன்னும் துகிலும் அறுசுவை உண்டியும் வழங்குக. சீக்கிறம தேர் கொணர்ந்து வங்க தேசம் செல்ல ஆயத்தம் செய்க.

ஸுபுத்தி:— அரசே! தேவரீரது மன நோக்கம் எப்படியோ அப்படியே நகரமெங்கும் பறை யறைவித்து விளம்பரம் செய்து விட்டேன். தம் விருப்பப்படி எல்லாம் சித்தமாகின்றன.

(வீரவர்மா முதலியவர்கள் வெகு விமரிசையாய் இரதமேறி வங்கதேசம் செல்லுகிறார்கள்.)

(அனங்கபாலன், சுதர்சனன் முதலியோர் வீரவர்மா ஸம்புத்தி இவர்களை வரவேற்கிறார்கள்.)

---

## ஐந்தாம் அங்கம்—நான்காம் காக்ஷி.

---

நாடக பாத்திரங்கள்:— அனங்கபாலன்—வங்கநாட்டதிபதி; குணமாலிகா—இளவரசி; அம்புஜா, விமலா—பணிப் பெண்கள்; விரவர்மா—விராடதேசாதிபதி; லோசனா—வீரவர்மாவின் பட்டமஹிஷி; தனசேகரர்—அனங்பாலரின் மந்திரி; பிரஜண்டவீர்யன்—வங்கதேசாதிபதியின் சேனைத் தலைவன்.

இடம்.— வங்கதேசாதிபதியின் அரண்மனை.
காலம்:— முற்பகல்.

எந்தாய்! அனைத்துலகும் ஈந்தாய்! எத்தேவர்க்கும்
தந்தாய்! செழுங்குவளைத்தாராய்! பெருந்துறையில்
வந்தாய்! மதுரைத்திருவால வாய் உறையும்
சிந்தாமணியே! சிறியேற்கிரங்காயோ?
(திருவிளையாடற் புராணம்.)

**அனங்கபாலன்:**— அரசே! சேனாதிபதிகளே! மந்திரிகளே! கலைவல்லோர்களே! நகரஜனங்களே! உங்கள் வரவு நல்வரவாகுக.

**குணமாலிகா:**— தந்தையே! அன்னையே! நமஸ்கரிக்கின்றேன். தங்களைக்காண்பேனோ மாட்டேனோ என்ற கவலை பெரிதும் என் மனத்தை வருத்திக் கொண்டிருந்தது.

எங்கள் வரலாறு முழுதும் வாயு வேகன் மூலம் அறிந்திருப்பீர்கள் என்று எண்ணுகிறேன். அம்புஜா—விமலாவுக்கும் எப்பொழுதும் தங்கள் ஞாபகந்தான்

அம்புஜா, விமலா:— அரசே! அன்னையே! நாங்கள் உயிர் தப்பி இந்நகர் மீண்டதற்குக்காரண புருஷன் சுதர்சனனே! நமஸ்கரிக்கின்றோம்.

வீரவர்மா, லோசனை:— கண்மணிகளே! உங்கள் திருமுகங்கள் காணுமல் எங்கள் கண்கள் ஒளி மழுங்கின. உங்கள் இன்சொல் கேளாமல் நாங்கள் அனாதைகளானோம். பிறவிக் குருடன் பார்வை பெற்றது போலவும் மரித்த ஒருவன் பிழைத்து எழுந்தது போலவும், அடக்கவொண்ணு ஆனந்தம் உங்களைக்கண்டு அடைந்தனம். உங்களுக்கு ஸர்வ மங்களங்களும் உண்டாகட்டும்.

குணமாலிகா:— தந்தையே! எங்களுக்கு உயிர்ப் பிச்சை கொடுத்தவன் அந்த மகானுபாவன் சுதர்சனனே! தயாநிதியாகிய கடவுள் அவனுடைய மனத்திற்றேன்றி எங்களுக்கு உதவி புரியும்படியான ஊக்கம் அளித்திலரேல் நாங்கள் காளிக்கு பலியாயிருப்போம்.

வீரவர்மா:— ஐயோ! கண்மணிகளே! உடல் நடுங்குகிறதே. (கண்ணீர்விடுகிறான்)

ஸாயனு.— மவராசா! கம்பளி தர்ரட்டா? நடுக்குதா? இல்லாட்டி காய்ச்சலா?

வீரவர்மா:— அனங்கபாலரே! எனது வேண்டுகோள் ஒன்று. நமது செல்வக்குமரன் சுதர்சனனுக்கு எனது பெண்மணி குணமாலிகாவையும், தமது மந்திரி தனசேகரருக்கு குழந்தை அம்புஜாக்ஷியையும், தமது சேனாதிபதி

பிரஜண்டவீரியனுக்குப் பெண்மணி விமலாவையும், மணம் புரிவித்து, அந்தக் கல்யாண மஹோத்ஸவத்தைக்கண்டு களிக்கவேண்டுமென்பது. தயைகூர்ந்து அப்படியே என் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிவைக்கவேண்டும்.

அனங்கபாலன்.— அரசர் ஏறே! தமது சொல்லுக்கு எதிர் மொழியும் உண்டோ. எல்லாம் இனிது தமது விருப்பப்படியே நடைபெறட்டும். குழந்தை சுதர்சனனும், எனது வாழ்க்கைத் துணைவி வனஜாவும், தங்கள் சம்மதத்தை என்னிடம் முன்னரே தெரிவித்துவிட்டார்கள், தனசேகரர் பிரஜண்டவீர்யன் இருவரும் தமது விருப்பத்திற்கிணங்கச் சம்மதித்துவிட்டனர். இவ்வதூவரர்கள் ஈசனருளால் நீடூழிவாழ்வார்களாக.

வீரவர்மா:— அரசே! இன்றே சுதினம். இக்கல்யாண சுப வைபவங்களைக் கண்டு நானும் என் பரிஜனங்களும் மகிழ்ந்தனம். இந்த மகா வைபவத்தைக் கண்ட பிறகே என் கண்கள் பெற்ற பயனை அடைந்தன. இவர்கள் நீடூழி வாழ்க. எல்லாம் வல்ல ஈசன் இவர்களுக்கு நீண்ட நோயற்ற வாழ்வையும், குறைவற்ற செல்வத்தையும், எல்லாவித ஸந்தான ஸம்பத்துக்களையும், கருணையுடன் அளித்தருள்வாராக.

அருமறை முதல்வனை ஆழிமாயனைக்
கருமுகில் வண்ணனைக் கமலக்கண்ணனைத்
திருமகள் தலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்.

(கம்பராமாயணம்)

(கல்யாணம் முடிந்த பின்னர் எல்லோரும் ரதமேறி விராடதேசம் செல்லுகின்றனர்.)

சுபம்! சுபம்!! சுபம்!!!

# GUNAMÂLIKÂI



## THE TRIUMPH OF CHASTITY.



BY

N. R. TATACHARI, B.A.

'சிறைகாக்குங் காப்பெவன் செய்யுமகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை'—திருக்குறள்.

Madras:
THOMPSON & CO.,

1902.

DEDICATED

TO

My Mother and to my Father

AS A SMALL TOKEN OF

my abiding love and gratitude

# PREFACE.

This little book is an adaptation to oriental taste of an English poem—Milton's Comus. The difficulty of such a rendering as will preserve at least the essential features, if not all the subtle graces, of the poem, would have completely deterred me from attempting the task, were it not that my only motive was to bring within the reach of my countrymen the sublime and beautiful thoughts of one of the greatest poets of Great Britain.

2. I do not plead this inherent difficulty of the task as an apology for the shortcomings of my present venture. There must be some of them, for which my incompetency has to be responsible. While considering work like this to be one of the proper means of improving Tamil Literature in its present transitional stage, I am aware, how little it is that I can do in the matter, and how even that little may not be what it ought to be. I shall therefore heartily welcome all suggestions towards the improvement of this, my maiden endeavour to enrich Tamil Literature from outside sources.

3. I have to thank Prof. M. Rangachariar, M.A., of the Presidency College, not only for the introduction, but also for many valuable suggestions which have enriched the present work. Indeed it is not too much to say that the book owes its present form to him.

4. For the metrical sings in the book, I have to thank my old teacher, Mr. Gopala Charriar of the Christian College. I also beg to acknowledge my indebtedness to Messrs. Sriranga Chariar and Srinivasa Chariar for the valuable help they rendered while the book was in the press.

TRIPLICANE,
*7th March*, 1902. N. R. K. T.

# INTRODUCTION.

THIS small Tamil work is mainly a prose renderin g of Milton's Comus. It is, however, not a strict translation of the English poem ; it is both a translation and an adaptation of the story as given by Milton to suit the taste of the Tamil reader. The author, being an old pupil of mine, read to me his work while it was in manuscript and asked me for suggestions to improve it ; and from the intimate knowledge I have thus been able to acquire of it, I am able to state that in adapting the story to the Indian reader, the beauty in the plo t and the aim of the English original have been as little njured as possible. In Milton's Comus the imagery is almost oriental in its vivid coloration and profusion of eeling and his ideal of womanhood comes very near o that ancient Indian ideal which is so well depicted in our Epic and Puranic Literature. Thus the work lent itself very well to the treatment of the Tamil translator, and as a result we have an interesting, though smal l addition to Tamil grose Literatue of the modern type ; and I have no doubt that the success of this endeavour will lead the author to work more and more in the field of popular enlightenment and Vernacular Literature.

M. RANGACHARYA,

*Professor of Sanskrit*

*and Comparative Philology.*

*Presidency College*

TRIPLICANE,
*7th March* 1902.

சென்னை

பிரஸிடென்ஸி காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

புன்னை-மாடபூசி ஸ்ரீநிவாஸாசாரியரவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.



நலஞ்சால் கடல்சூழ் தரணிமா தினுக்கு
முகமெனப் பல்லோர் முன்னிய யூரோப்
கண்டந் தனக்குக் கவின்செயும் பொட்டென
எண்டிசை போற்று மெங்க்லாந் தினில்
கல்வியாற் பொருளாற் கனத்திறற் பீடையால்
வல்வலி வாய்ந்த வண்ணவாங் கிலேய
வரசாட்சியின்முனை யமர்ந்த நூல் வல்லான்
உரைசால் வாய்மைய னுள்ளத் தூய்மையன்
பாவலர்க் கிறைவன் பக்தியிற் சிறந்தோன்
காவலர் போற்றுங் கனஞ்செறி மில்டன்
என்னுமா கவிஞ னியற்றோ கோமஸ்மாஸ்க்
கன்னியல் வகையைச் சார்ந்தவோர் நூலைத்
தமிழறி சான்றோர் தாமுணர்ந் துவப்ப
அமிழ்தினு மினிய வஞ்சொலா லமைத்துக்
குணமாலிகை யெனக்கொள் பெயரிட்டுப்
பணைமலி பார்மேற் பரவச்செய்தனன்
உம்பரும் வியக்கு முயர்புகழ் வாய்ந்த

கும்பகோ ணத்துட் குடியிருப்பு டையோன்
இரகுநாதா சாரெனும் பெயர்பெற்ற
வாகுரு தவத்தால் வந்துதித் திட்டோன்
தமிழுட னிங்கிலஞ் சதிருறக் கற்றோன்
கமழ்திருத் துளவணி கருடவாகனனார்
பத்தியிற் சிறந்த பரமவைணவன்
முத்தியி னாலெலா முடிவுற வாய்ந்தோன்
கோதா ரொழுக்கறு குமார
தாதா சாரியாங் தகைப்பெய ரோனே

---

# சிறப்புப்பாயிரம்.

---

‘குணமாலிகை’ எனப் பெயர்புனைந்த இத்தமிழ்ச் சிறுநூல், ஸ்ரீமான் என்.ஆர். தாதாசாரியர் பி.ஏ. அவர்களாலியற்றப்பட்டுச் “சுருங்கச் சொல்லல்” முதலிய பத்தழகையும், இயலிசை முதலாய முத்தமிழையுங் கொண்டு படிக்கற்கினிமைபயக்கும் பான்மையதாய் விளங்காநின்றது. இது ஆங்கிலநாட்டின் கவிரத்னங்களில் ஒருவராய ‘மில்டன்’ என்பவராற் செய்யப்பட்ட ‘கோமஸ்’ எனு மொரு நூல் வகையினின்றும் மொழிபெயர்க்கப்பட்ட தொன்றாயினும் இக்காலத்திற் கேற்பவும், இந்துநாடாகிய இந்நாட்டின சுவையுணர்ச்சிக்கியையவும் ரஸபாவ கற்பனாலங்காரங்களை ஏற்கு மிடங்களிற் கொண்டியன்றுளது. இன்னு மிது கற்பினையே மிகுதியும் வற்புறுத்திக் கூறும் சீரிய கருத்தது. இந்நூல், நாடகம், பிரகரம் முதலியவற்றி னிலக்கணங்களைப் பெருது ஓரங்கமாத்திரையாய் நின்றமையின் “வியாயோகம்” எனப் பெயர்பெறலாம் என்ப.

இனி, இதனைப் படித்தலாற் சொல்வன்மையும், பாஷாஞானமு முண்டாவதுடன், தேய வியற்கையும் காலவியற்கையும் அறிதற்கு இஃதோர் கருவியாகலாம்.

இங்ஙனம்


தி. கோ. ஸ்ரீரங்காசாரியன்.

சர்ச் ஆப் ஸ்காட்லண்டு

மிஷன் காலேஜ் தமிழ் பண்டிதர்.

# பிழை திருத்தம்.

| | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| சிறப்புப்பாயிரம் வசனநடை | | 15 | பிரகரம் | பிரகரணம் |
| | 7 | 25 | | |
| | 8 | 13 | | |
| | 15 | 14 | சத்தத்தை | சத்தம் |
| | 34 | 21 | அளவின் | அளவின்றி |
| | 43 | 2 | கண்ணைன் | கண்ணின் |

தேவ புருஷன்.—பிறகு கண்ணன் என்னும் யாதவ வேடம் தரிக்கின்றான்.

மோகனன்.—ஒரு மந்திரவாதி.

அவன் பரிவாரங்கள்.—

குணமாலிகை.—ஒரு மாது சிகாமணி.

தேவப்பிரியன். } அவளது சகோதரர்கள்.
பாலசுந்தரன். }

வாஸந்தி.—ஒரு வனதேவதை.

# குணமாலிகை.



## காப்பு.

குணமா லிகைசரிதங் கூறத் துணையாம்
பணநா கணைமால் பதம்.

**இடம்:**—காட்டின் ஒரு புறம். **காலம்:**—மாலை.

**தேவ புருஷன்**— (ஆகாயத்தினின்றிறங்கி), ஜனங்கள் நன்னெறிபற்றி யொழுகின் தேவதைகளாகச் சிம்மாஸனம் பெறலாமென்று சிறிது மெண்ணுமல் வீணுக வாளுளைக்கழிக்கும் இப்பாழ்ம பூமிக்கு மேல் நிர்மலமாய் விளங்கும் இந்திரலோகமே யானும் எனது சகதேவதைகளு மிருக்குமிடம். ஆனல் இவ்வுலகிலும் சன்மார்க்கவழியில்நின்று முத்திபெற விரும்பும் சிலர் இருக்கின்றார்கள். அவர்கள்பொருட்டே நான் எனது தேவ வேடத்தை நீக்கி இப்பாவ பூமிக்கு மானிடவேடம் பூண்டு வரவேண்டியிருக்கின்றது. இப்பொழுது என் காரியமோ:—

வருணனுக் குரியவை சமுத்திரமும அதிலிருக்கும்தீவாந்தரங்களும். இத்தீவாந்தரங்களில், மேன்மைதங்கிச்சிறப்புற்று விளங்கும்இத்தீவின்

மேற்புறத்திலிருக்கும் வெகு பராக்கிரமும் காம்பீரியமும் சங்கிய ஜாதியாரைப் பய நயத்தால் ஆளும்பொருட்டு, நிறையும் நேர்மையுமுள்ள ஒரு பிரபுவை அவன் அனுப்பியிருக்கிறான். அப்பிரபுவுக்கு முடிசூட்டுவதைக் காணச் சாஸ்திரங்களிலும் இராஜவித்தைகளிலும் வல்ல அவரது அழகிய புதல்வர்கள் வருவார்கள். அவர்கள் வரும்வழி இவ்வடர்ந்த புதர் நிரம்பிய காட்டின் மார்க்கம்.

"இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியா" என்றும்
"பரிதியின் செல்வன் விரிகதிர்த்தானைக்
கிருள்வளை யுண்ட மருள்படு பூம்பொழில்" என்றும்

கூறியபடி மரங்கள் மிகுதியு மடர்ந்துள்ள அக்காட்டகம், கார்காலத்து ஆமாவாசையின் நள்ளிருள்போலக் கள்வர் முதலியோரும் கருத்திலச்சங் கொள்ளத்தக்கது. இதில் மரங்கள் அசைவதே, தன்னந் தனிச்செல்பவர்களை அச்சுறுத்தத்தக்கது. இத்தகைய காட்டில் அப்பாலகர்களுக்கு அபாயம் நேர்ந்து இடுக்கண் விளையுமென்று அவர்களைக்காக்க இந்திரனது கட்டளையினால் யான் இங்கு வந்தனன். இடுக்கண் யாதோவெனில், மந்திரங்களில் தேர்ந்து தன்னை அணுகுபவர்களையெல்லாம் பன்றியாக மாற்றும் சக்தியுடைய, சூரன் பெண்ணாகிய வைரோசனி என்பாள், 'மதிரன்' என்னும் பானக் கடவுள்மீது மோகங்கொண்டு, அவனைச்சேர்ந்து

மோகனன் என்னும் பிள்ளையைப் பெற்றனள். இப்புதல்வன் தாயினும் மிகவல்லவன். அவன் அநேக ஊர்களிலெல்லாம் திரிந்து இப்பொழுது இவ்வடவியில் இருந்துகொண்டு இவ்வழியில் சூரிய வெப்பத்திலடிபட்டு வருபவர்களின் தாகத்தைத் தணிக்கக் களங்கமற்று விளங்கும் நீரை ஓர் ஸ்படிக பாத்திரத்தில் குடிக்கக் கொடுக்கின்றான். அந்நீர் உள்ளே இறங்கவும் தேவ ஸ்வரூபம்போன்ற இம்மானிட உருவத்தின் முகம் கரடி புலி பன்றி ஆடு இவைகளின் முகமாக மாறிவிடும். வேறு விகார முண்டாவதில்லை. இவர்களோ, தங்கள் விகார ரூபத்தை அறியாராகி முன்னிலும் அதிக ரூபலாவண்ணிய சௌந்தரிய முடையவர்களாக எண்ணித் தங்கள் வீடு வாயில்கள் சிநேகர்கள் பந்துக்கள் யாவரையும் மறந்து ஆங்குக் கொட்டிலிலடைபட்டுச் சிற்றின்பத்தில் மூழ்கி உழல்பவராகின்றார்கள்.

ஆனால் இந்திராதிதேவர்களை வேண்டி நல்வழியில் நடக்கும் நல்லோர் யாவராகிலும் இவ்வழிச்செல்ல நேரிட்டால் யான் மின்னல்போல் ஆகாயத்தினின்றும் இழிந்து அவர்களுக்கு வழித்துணையாகி அவர்களைக் காப்பேன். இதற்கு முன் வான விற்போல் ஒளி நிரம்பி விளங்கும் தெய்வத்தன்மைபொருந்திய உடையைக் களைந்து அரசன் மகுடாபிஷேகத்துக்குவரும் இப்

பாலகர்கள்வீட்டு இடையன் வேடம் பூண்டு குழல்ஊதி வருவேன். இங்ஙிலையைப் பூண்டன்றே, அவர்களுக்குச் சரியான உதவி புரியமாட்டுவேன். இதோ துஷ்டர்கள் அடிச்சத்தம் கேட்கின்றது. நான் மறைந்துகொள்ளவேண்டும்.

காலம்:—முதல்யாமம்.

(ஒரு கையில் மாத்திரைக்கோலும் மற்றொரு கையில் ஸ்படிக வேதியும் ஏந்தியுள்ள மோகனனும், மிருகங்கள் தலையும் மனிதர்கள் உடலும் தாங்கிய அவன் பரிவாரங்களும், கொட்டி முழக்கிச் சிற்றின்பத்திலாழ்ந்து கையிற் கொள்ளிகொண்டு வருகிறார்கள்.)

**மோகனன்.**—மாலைப்பொழுதாய் விட்டது. இடையர்கள் மாடுகளை ஓட்டிக்கொண்டு வீட்டுக்குச் சென்றுவிட்டார்கள். ஒற்றையாழியான் சோதிமயமான ரதமும் சுழுக்கொண்டு மேற்கடலில் ஆழ்ந்துவிட்டது. வயது முதிர்ந்தவரும், சீலம் முதிர்ந்தவரும் உறங்கும் வேளை வந்துவிட்டது. நம்மைத் தடுப்பவர்கள் யாருமில்லை. மடைதிறந்த கடல்போல் யாம் அளவளாவிக்களிக்கும் காலம் இதுவே யாகும். இத்தகைய இரவு, வேனிலைக்கண்ட வேள் போலவும் கார்காலத்தைக் கண்ட கலாபமயில் போலவும், கன்றைக்கண்ட ஆவேபோலவும் யாம் களிகூரத்தக்கதேயாகும். வாருங்கள் நாம் நக்ஷத்திரங்களைப் போல் இமையாத நாட்டத்துடன் ஆடிப்பாடிக் களிப்போம்.

சந்திரனைப்பார்க்க மீன்கள் துள்ளுகின்றன. சமுத்திர தீரத்தில் தேவதைகள் நர்த்தநஞ் செய்கிறார்கள். இரவுக்கும் தூக்கத்துக்கு மென்ன சம்பந்தம்? விழித்திருந்தால் இரவில்மிகுந்த இன்பங்களை அனுபவிக்கலாம். 'காமத்தைக் காக்கக் கரையொன்று மின்றன்றோ'?

" சிறையு முண்டோ செழும்புனல் மிக்குழீஇ
நிறையு முண்டோ காமங் காழ்கொளின்"

வாருங்கள், நாம் நமது சிற்றின்பக் கூத்துக்களைத் தொடங்குவோம். அவைகள் வெளிப்பட்டாலலலவோ பாபம். இரவிலோ நாம செய்யும் கிருத்தியங்கள் வெளிக்குவாரா. சிற்றின்ப நாயகியே! துர்நீதியே! மையிருள் வருவதற்கு முன் வெளி வாராத அம்மையே! நின்வரவை எதிர்பார்த்திருக்கும் எங்கள்பேரில தயவுகூர்ந்து தாமதி. கோட்சொல்லிச் சூரியன் வருமுன் உனக்குரிய கடன்களையெல்லாம் பெற்றுக்கொண்டேகு. வாருங்கள் எனது பரிவாரங்களே! கைகலந்து கூத்தாடுங்கள்.

(கூத்தாடுகிறார்கள்.)

ஓடுங்கள் ஓடுங்கள். இவ்விடத்தில் ஒரு கற்புடைய மாதின் அடிச்சத்தம் கேட்கின்றது. மரங்களிலும் புதர்களிலும் ஒளித்துக்கொள்ளுங்கள், அவள் நமது குழாத்தைக்கண்டு பயப்படுவாள். ஒரு மாதுசிகாமணி இக்காட்டில் இந்கள்ளிருளிற்சிக்கிக்கொண்டிருக்கின்றாள். எனது

மந்திர சக்தியினால் என்தாயினும் பதின்மடங்கு அழகிய மாதர்கூட்டம் என்னைச் சுற்றிலும் சேர்த்துக்கொள்வேன். எனது ஆடையும் இத்தலமும் அவனுக்கு ஐயம்மூட்டி ஓடச்செய்யாமலிருக்கும்பொருட்டு அவனது கண்ணை மயக்க இந்தச் சுக்குப்பொடியை ஆகாயத்தில் இறைப்பேன். (பொடியைத்தூவி) பிறகு நான் உற்ற துணைவனைப்போல நடித்து முகமனியம்பி மரியாதை வார்த்தைகள் பேசி மயக்கி அவள் மனதைக் கவர்ந்து என் வலைக்குட் சிக்கச்செய்வேன். இப்பொடி அவள் கண்ணிற்படவும், தன் கருமமே கண்ணாக உழைத்து வாழும் குடியானவன்போற் புலப்படுவேன். அவள் இதோ வருகின்றாள். நான் மெதுவாய் வழிவிட்டு ஒதுங்கி அவள காரியம் யாதென்றறிவேன்.

(மறைந்து கொள்கிறான்.)

குண:—(அக்கூத்தின் ஆரவாரத்தைக்கேட்டு அவ்வழிச்சென்றுகொண்டே.) அச்சத்தம் இப் பக்கத்தினின்றே வந்தது. அது பட்டிக்காட்டுக்குடியானவர்கள் ஆடுமாடுகள் விருத்தியாகும்பொருட்டும், தானியங்கள் வளமாய் விளையும் பொருட்டும் தங்கள் இஷ்ட தெய்வத்தைக் களிகூர்ந்து கூத்தாடிக் கொண்டாடும் சத்தம்போலிருந்தது. இவ்வாறு அகாலத்திற் குடித்துக் களிக்குமவர்களைப் பார்க்கவிருப்பமில்லையே. ஆனால் வேறு எங்கே இவ்

# குணமாலிகை.

வடர்ந்து இருண்ட காட்டில் வழி தெரிந்துகொள்வேன். நான் இம்மாளாவழி நடந்து களைக்கவும் என் சகோதரர்கள் என்னை இம் மரத்தடியில்விட்டு முதிர்ந்த பழமும் குளிர்ந்த நீருந் தேடி ஏகினார்கள். அவர்கள் போகும்பொழுது சூரியன் குடதிசை அடைந்தனன். பகலவனும் இங்ஙனம் என்னை இக் கடுங்காட்டில் தனியே விட்டுச் சென்றது யாது பற்றியோ! ஒருகால் தன் வெய்ய கிரணங்களால் நான் இங்ஙனம் களைப்படைந்தே னென்றெண்ணிக் கருணைகூர்ந்து மறைந்தனனோ? அன்றி, எனக்கு நீர் உணபித்துக் களைப்பைத் தீர்க்கக் கருதித் தனது கரத்தை மேற்கடலில் நீட்டிச் சென்றனனோ? ஆ! யாதென்பேன்! எனது சகோதரர்கள் இப்பொழுது எங்கே யிருக்கிறார்களோ? ஒருவேளை பழத்தையும் நீரையுந்தேடி வெகுதூரம் சென்றிருக்கலாம். அப்பொழுது பொறாமை கொண்ட இருள் வையச்சென்று அவர்களைக் கவிழ்ந்துகொண்டிருக்கலாம். ஏ கங்குலே! தாரைகளையும் மறைத்தனையே; என்ன கொடுமை செய்யக்கருதி இங்ஙனம் புரிந்தாய்! 'மதியிலா விசும்பும், செவ்வி மணமிலா மலரும், தண்ணீர் நதியிலா நாடும், செம்பொன் நரம்பிலா நாதயாழும், நிதியிலா வாழ்வும், தக்க நினைவிலா நெஞ்சும், என்றபடி யான ஒளியிழந்து கண்ணிழந்த பிராணிபோல இவ்வருமபெரும் காட்டிற் கலக்கமுற்று வருந்துகின்றேனே.

"இளையிருள் பரந்ததுவே
யெற்செய்வான் மறைந்தனனே ;
கதிரவன் மறைந்தனனே
காரிருள் பரந்ததுவே ;
பறவை பாட்டடங்கினவே
பகற்செய்வான் அடங்கினனே."

(என்று சொல்லிக்கொண்டே போக ஓரிடத்தில் அச்சசத்தத்தின் அதிர்ச்சி மறுபடி காதிலேதாக்குகின்றது)

இவ்விடத்திருந்தே அச்சத்தம் உண்டாயது. இன்னும் அச்சசத்தத்தின் எதிரொலி காதைத் தாககுகின்றது. ஆனாலும் இருளொழிய வேறொன்றும் பார்க்கிறேனில்லையே! எனமனதில பற்பல நினைவுகள உதிக்கின்றனவே. பேய்களும் பிசாசுகளும கூவுகின்றன போலவும் அழைக்கின்றன போலவும சைகைசெய்கின்றன போலவும் தோற்றுகின்றனவே. இக்காட்சிகளும் ஓசைகளும் யாவரையும் திடுக்கிடச் செய்யத்தக்கவையே. ஆனால் நீதிநெறி நிற்பவர்களை ஒன்றும் செய்யா. அவர்களுக்கு ரக்ஷகனாய் அகத்துள்ள கர்மசாட்சி எக்காலத்தும அகலாது நின்று பாதுகாக்கும். விமலமான விசுவாசமே! மாசற்ற மனோரதமே! களங்கமற்ற கற்பே! உங்கள உருவத்தை விசதமாய்ப் பார்க்கிறேனே! இப்பொழுதன்றோ எனது ஐயம் நீங்கியது. தேவாதி தேவன் எனது உயிரையும் மானத்தையும் காக்கவேண்டி யிருப்பின் ஓர் ஒளிதிகழும் கந்தர்வனை அனுப்புவா னன்றோ!

(அச் சமயத்தில் ஆகாயத்தில ஒரு காந்தியுண்டாக, அதனை நோக்கி,) என் கண்தான் இங்ஙனம் பிரமிக்கின்றதோ அல்லது நான் பார்த்தகாந்தி மெய்தானோ! இவ்விருண்ட இரவில் கார்முகில் தன் ஒளிப்புறத்தைத் திருப்பியதோ? ஓ! நான பிரமிக்கவில்லை. ஆ! ஆ!! கார்முகிலே தனது ஒளிபபுறத்தைத்திருபபி எனக்கு உயிரைப் புகட்டியது. இதுவும ஓர் அற்புதமே. என்றாலோ உரத்துக்கூவச சக்தியில்லை; ஆயினும இப்பொழுதிருக்கும எனதுற்சாகத்தில் இயன்றவளவும் குரலெடுத்துப்பாடுவேன. எனது சகோதரர்களும அணிமையிலே இருக்கிறார்கள் போலும்.

(குணமாலிகை பாடுகிறாள்.)

இராகம் - யமுனா கலியாணி - ஏகதாளம.

## கண்ணிகள்.

இன்னுயிர்க்கிரங்குமன்னேயினபவொலியே !
உன்னைநமபினேனுக்கருளொானறுசொலியே !
என்னரியசோதரரைபெங்கேபொளித்தாய !
பன்னிப்பன்னிநானவருந்தப்பண்ணையளித்தாய் !
எனறனைவர்போனவழியியாமபுவாய்நீயே !
உன்றனையேநம்பிநின்றேனுவநதருள்வாயே !
கானே ! பெனறனகண்ணைப்பாரைக்காட்டித்தாராயோ !
வானேயூருந்தெய்வமேயென்வருத்தம்பாராயோ !
கானறேயெனநம்பிமாரைச்கண்ணிற்காட்டாயோ !
ஊனேவாடும்பேதையேனுக்குதவமாட்டாயோ !
என்முன்னேயோரெதிரொலியாயினிதேபண்செய்வாய்!
வன்மஞ்செய்யாயென்மைந்தரைமருவக்கண்செய்வாய் !

**மோ:**—(தனியே) ஆ! ஆ!! இப்புவியிடத்தும் மானிடர்கள் இவ்வளவு இன்பமாய் மனத்தை உருக்கும்படி பாடுவார்களோ! நிஜமாய் ஏதோ புனித விசேஷமிவளிடத்திருந்து தனது இருக்கையை இக்கான ரூபமாய் வெளிப்படுத்துகின்றதுபோலும்! அது நிச்சப்தமான இவ்விருளில் எவ்வளவு இன்பமாயிருந்தது. இவள் பாடப்பாட இரவும் மனமகிழ்ந்து புன்னகை செய்ததே. என் தாய் வைரோசனியும், அவளுடன்கூட அப்ஸரஸ்களும் பூந்தோட்டங்களில் மூலிகைகளைப் பறித்துக்கொண்டே கீதம் பாட யான் கேட்டிருக்கிறேன். அப்பொழுது அந்த உயிரைப் பரவசப்படுத்தி மெய் மயங்கச்செய்து ஆனந்தக்கடலில் ஆழ்த்தும். ஆனால் இதுவோ வெகு அமர்ந்த ரம்மியத்தையும் உணர்வோடு கூடிய பரமானந்தத்தையும் திண்ணமாய் அநுபவிக்கச் செய்கின்றது. பாற்கடலின் படுவிஷத்தோடு தோன்றிய அமிர்தமாயினும், அவ்விஷத்தின் சேர்க்கையால் ஒருகால் அதனை உண்டவரை வருத்த இடமுண்டு. இவளது கானமாகிய அமிர்தமென்றாலோ, அங்ஙனம் தோஷத்தின் சேர்க்கை சிறிதுமின்றியும், என்னிடத்து வெப்பத்தைதமிக மூட்டியதே! இதன் தன்மையிருந்தவாறு என்னே!

"உண்ணாதே யுயிருண்ணா தொருநஞ்சு
சனகியெனும் பெருநஞ் சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே யுயிர்"

என்பதன் உண்மையையும் இவள்கண்ணன்றோ, வறிந்தேன். நான் இவளோடுபேசி இவளை எனக்கு உரியளாக்கிக் கொள்வேன்.

(குணமாலிகையை நோக்கி) ஏ! அற்புத அணங்கே! நிச்சயமாய் நீ இவண் உறைபவளல்லை. ஒருவேளை நீ இந்த ஆரண்யத்துக் காசியான வனதேவதையோ? வனத்தில் மரங்கள் பட்டுப் போகாமல் தழைத்து ஓங்கும்வண்ணம் நீங்குரலெடுத்துப் பாடினையோ? உனது இசையைக் கேட்டு "மருண்டு மான் கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லும் கடைவாய்வழி சோரும்-மரங்களினின்று மதுதாரைகள் பாயும், மலர்கள் வீழும், வளர் கொம்புகள் தாழும்", பட்ட மரங்கள் துளிர்க்குமே!

குண.—அந்தத் தோத்திரமிருக்கட்டும். மனது வேறு வழிப்பட்டிருக்கு மவர்க்கு நீ படிக்கும் தோத்திரம் எப்பொழுதும் பாழன்றோ! எனது சக்தியைக் காட்டும்பொருட்டுப் பாடியதன்று. எனது குரலைக்கேட்டு என்னைப் பிரிந்தவர்கள் அடையும் வண்ணம் செய்த உபாயமே.

மோ.—அஃது எப்படி நேர்ந்ததுமாதே?

குண.—மையிருளினும் அடர்ந்த அடவியினும்

மோ.—அதனால், கூடநெருங்கி வருபவர்கள் எப்படிப் பிரிபடுவார்கள்?

குண.—நான் களைப்புற என்னை மரத்தடியில் விட்டுச் சென்றார்கள்.

மோ.—அப்படிச் செய்தது அவமதியினாலோ வஞ்சனையினாலோ, அல்லது வேறு காரணத்தாலோ?

குண.—அயலில் குளிர்ந்த நீர்தேட.

மோ.—வேறு துணையொன்று மின்றியே உன்னைவிட்டுப் போனார்களா?

குண.—அவர்களும் இருவர்களே. சீக்கிரம் திரும்பி விடலாமென்று சென்றார்கள்.

மோ.—அதற்குள் இருள்வந்து சூழ்ந்துவிட்டதோ?

குண.—எனது துன்பநிலை எவ்வளவு எளிதில் அறியக்கூடியது பார்.

மோ.—இப்பொழுது வழிகாட்ட ஒருவருமில்லையே என்பது தவிர அவர்கள் பிரிவினால் வேறு வருத்தமுண்டோ?

குண.—எனது சகோதரர்களை இழக்கும் துக்கமே தவிர வேறின்று.

மோ.—அவர்கள் இளைய வாலிபர்களோ, முதிர்ந்த ஆண்பிள்ளைகளோ?

குண.—அவர்களுக்கு முகத்தில் இன்னம் மீசை முளைக்கவில்லையே.

**மோ.**-குடியானவர்கள் மாடுகளை உழவினின்றும் வீட டிக்கு ஓட்டிப்போகும் வேளையில் அத்தகைய இருவரைப்பார்த்தேன். அவர்கள் அந்தக் குன் றில் முதிர்ந்த பச்சைத் திராக்ஷப்பழக் குலை களைப் பறித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இருந்தவாறு நோக்குங்கால் சாதாரண மனிதர் களாகத் தோற்றவில்லை? வானுலகில் வதியும் வானவர்கள்போல் விளங்குகின்றார்கள். வானி லுலாவி வானவில்லின் வண்ணம்பூண்டு மேக மண்டலத்தில் விளையாடும் கந்தர்வர்கள் என் றெண்ணினேன். எனக்கு அவர்களிடத்துப் பயமும் மரியாதையும் தோன்ற அவர்களை நம ஸ்கரித்துச் சென்றேன். நீ தேடுவது அவர்க ளாயிருப்பின் மிகு சந்தோஷத்துடன் அவர்க ளிருக்குமிடத்தைக் காட்டுவேன். ஆனால் வழி யோ ;—

"பொருந்தார்கை வேலுதிபோற் பரற்பாய"வும்
"மெல்லடிக்கண் குருதிசோர"வும்
"விரும்பாத கா"னிலுள்ளது.

**குண.**—எவ்வழி அவர்களிருக்குமிடம் சீக்கிரம் சே ரும் ?

**மோ**—.அது இப் புதரினின்றும் நேர் மேற்கிலுள் ளது.

**குண.**—பிரகாசமற்ற நக்ஷத்திரங்களோடு கூடிய இவ் விருண்ட இரவில் அதை முன்பின் அறியாதவர் கள் கண்டு பிடிப்பது கடினமன்றோ ?

மோ.—நான் இக்கானில் ஒவ்வொரு பொந்தும், புதரும், குன்றும் குகையும், மூலையும் முடுக்கும், ஆறும் காலும் செவ்வையாய் அறிவேன். உன்னைப்பிரிந்த உனது சகோதரர்கள் இன்னு மிக்காட்டிலிருப்பின் காலைக் கருக்கினுள் குயில்கள் கூவுமுன் யானறிவேன். அப்படியில்லாவிடில் உன்னை அவர்கள் தேடி வருமளவோ, நான் அவர்களைத் தேடிப் பிடிக்குமளவோ, எனது சிறு குடிலில் பயமின்றித் தங்கியிருக்கலாம்.

குண.—ஏ மள்ளர்கோனே! உனது உபசாரத்துக்கு இணங்கி உன்னை நம்பி உன்னுடன் வருவேன். இம்மரியாதை, உயர்ந்த ஆஸ்தானங்களிற் பிறந்து, அங்ஙனே செய்தற்குரிய உபசாரமாயினும், அவ்விடத்துச்சிறிதும்காணப்பெறுமல், நின்போன்ற எளியார் குடிசைகளில் மிகுதியும் எளிதில் வழங்குகின்றது. இஃதென்ன வியப்பு! நான் இப்பொழு திருப்பதினும் அபாயகரமான நிலை வேறுண்டோ? வேறொரு இடத்துக்குச் செல்ல ஐயங்கொள்ளவு மிடமுண்டோ?

(தனக்குள்) எம்பெருமானே! என்னை நீர் கடாக்ஷித்து எனது சக்திக்கு மேற்பட ஆபத்தை விளைவித்துச் சோதிக்காமலிருப்பீராக.

(அவனை நோக்கி) உழுநர் கொழுந்தே வழி காட்டு.

(மோகனனைத் தொடர்ந்து செல்லுகிறாள்.)

இடம்:—காட்டின் மற்றொருபுறம்.

காலம்:—இரவு இரண்டாம் யாமம்.

(சகோதரர்களிருவரும் வர)

**தேவப்பிரியன்.**—ஏ ஒளிர்ந்திருக்கும் நக்ஷத்திரங்காள்! வெளியே வாரீரோ; ஓ சந்திரனே! பிரயாணிகள் தோழனே! முகிலினின்று வெளிவந்து இவ்வாரிருளை நீக்காயோ! அல்லது சிறுகுடிசைப் பொந்தினின்றும் சிறு விளக்காயினும் எங்கள் பக்கல் ஒளியைச் செலுத்தாதோ? அவ்விளக்கையே துருவனாக மதித்துச்சென்று வழி யறிவோமே!

**பாலசுந்தரன்.**—இவ்வித அதிட்டம் எங்கள் கண்ணுக்கு வாய்க்காவிடினும் காதிலாவது ஏதேனும் ஒரு சத்தந்தானு கேளாதோ! ஆட்டுமொட்டுக் கொட்டினின்றேனுமொருசத்தம்காதிற்படாதோ! இடையர்குழலூதுங்கானமோ, யாமத்துக்கூவும்சேவற்கூவலோ செவியில் வீழாதோ! விழுந்தால் இவ்விருண்ட அடர்ந்தகானில சிறிது ஆறுதலாயிருக்குமே; மனதைக்குளிர்ப்பிக்குமே. ஐயோ! அந்தத் துர்ப்பாக்கிய மடந்தை நமது சகோதரி எங்கே அலைகிறாளோ! சிலுசிலுத்த பனியினின்றும் எங்கே யொதுங்குவாளோ; குளிரிலடிபட்டு எக்கரையில் உறங்குகின்றாளோ; அல்லது முள் அடர்ந்த மரத்தின்மீது துன்பங்கொண்டு பயந்து சார்ந்துகொண்டிருக்கிறாளோ;

அல்லது இவ்வாறு நாம் பேசும் போதே கொடிய மிருகங்களின் பசிக்கு இரையாகிருளோ; அன்றி எவனுயினும் ஒரு கொடியனது காமத்தீயிலகப்பட்டு வருந்துகின்றுளோ.

தேவ.—தம்பி, அப்படியெல்லாம்பேசாதே; இன்னும் பின்வரக்கூடிய துன்பங்களைப்பற்றி வீணில் முன்னே உன்னி உறங்காதே. அப்படித் தீங்கு நேரிடுவதாகவே யிருந்தாலும், தெரியாமலிருக்குமளவும் ஒருவன் தான் விலக்க விரும்பும் துன்பங்களை ஏன் எதிர்கொண்டு அழைக்கவேண்டும்? ஏன் வீணுக எண்ணுத எண்ணங்களையெல்லாம் எண்ணி எண்ணி வருந்துகின்றுய்? அப்படியன்றி நீ எண்ணியது பொய்யாகில் மிகவும் கொடிய ஆத்மவஞ்சனைக் குள்ளாவாயன்றே? இந்த இருளும் ஏகாந்தமும், ஒன்றியாயிருக்கின்ற நமது சகோதரியின் மனதைக் கலக்குமென்றே எண்ணுகின்றுய்? அவளோ மனத் தூய்மையுடையாள்; கற்பினுக்கு ஒரு வித்துப் போன்றவள். இத்தகைமையர்கள் தீங்குற்றுழியும் நீதிநெறி தவருது ஒழுகி உள்ளம் நிறைந்துள்ள ஒளிமிகுதியினுல் எல்லா மறிந்து நடந்துகொள்வார்கள். அவர்களுக்குச் சூரியனும் சந்திரனும் அவசியமில்லை. ஞானிகள் உலக வாழ்க்கையின் தொல்லையில் மூழ்கி மழுங்கியிருக்கும் ஞானத்தை, ஏகாந்தத்திலிருந்து தியானம்செய்து ஓங்கச்செய்கிறுர்களன்றே அவர்களுக்கு இருண்டபாதல உலகும், நடுநிசி

யில், பட்டப் பகல்போல் விளங்கும். அவர்களுக்கு ஊனக்கண்ணினும் ஞானக்கண்ணே உயர்ந்தது. அவர்கள் முக்தியாகிய பெரும் பயனை அடைதற் பொருட்டு நெஞ்சமென்னும் துணைவனை நேசம்பூண்டு வேறு துணையின்றி உலகப்பற்றினை அறுத்து ஆத்ம விசாரணைசெய்து மெய்ம்மையாகிய விளக்கேற்றிப் பொய்ம்மையாகிய இருளைப்போக்கிப் பரம்பொருளைக் காண்கிறார்களன்றோ ? அஃதன்றி, துச்சிந்தையையே மேற்கொண்டு பாபச் செயல்களையே புரியும் பாபிகளுக்கு உச்சிக்காலச் சூரியனிருப்பினும் எவ்வுலகும் இருண்டதே. “ எல்லாப் பிராணிகளுக்கும் எது இரவாயிருக்கின்றதோ அதில் புலன்களையடக்கிய யோகியானவன் விழித்திருப்பான். எதில் பிராணிகளெல்லாம் விழித்திருக்குமோ அது ஞானக்கண்ணுடைய முனிவனுக்கு இரவாய் விளங்குகின்றது” என்று கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவானும் கூறுகின்றார்.

மாலா.—மெய்யே. யோகிகள் மலைகளிற் குகைகளினும், வனங்களிற் பன்னசாலையினும் அச்சமற்று இன்புறத் தவம்புரிகிறார்களே ! ஆனால் ஒரு ஸந்நியாசியின் காவி வஸ்திரங்களையாவது புத்தகங்களையாவது ஜபமாலைகளையாவது கமண்டலத்தையாவது யார் கவர்ந்துபோவார்கள். ஆயின் எழிலுமிளமையுமோ நவரத்னப் பழக்குலைகள்

தொங்கப்பெற்ற கற்பகத் தருப்போலுமன்றோ! அவற்றைத் துராசையினின்றும் காக்கக் கண் கொட்டாமல் எப்பொழுதும் விழித்துள்ள இரண்டாயிரம் கண்படைத்த பன்னக வேந்தனன்றோ வேண்டும்! நீ பாலைக்காய்ச்சிப் பூனையைக் காவல்வைக்கலாமென்கிறாயே! இவ்வடர்ந்த காட்டில் இவ்விருண்ட இரவில் ஒன்றியாய் ஓரிளம்பெண்ணும் அகப்பட்ட சமயமும் வாய்த்தால் அதனை எவராகிலும் கைசோர விடுவார்களோ? இருளினும் தனிமையினும் எனக்குக் கவலை கிடையாது, அவைகளால் தொடரும் தீமைகளை யோசிக்க எனது உடல் நடுங்குகின்றது. நமது கன்னியாகிய சகோதரியை எப்பாதகன் தொடப்புகப்போகிறானோ வென்று என் மனம் பதைபதைக்கின்றது.

தேவ.—தம்பி! நமது சகோதரிக்கோ, பயமும் அபாயமும் முழுதும் அற்றதென்று பேசவில்லை. ஆனாலும் நன்மை தீமையிரண்டிற்கும் சமமாக இடமிருப்பின் பயத்தையும் சந்தேகத்தையு மொழித்து நன்மையைச் சார்வது எனது சுபாவம்; நீ எண்ணுமாறு நமது சகோதரி ரக்ஷிப்பாரற்றவளல்லள்; அவளிடத்து ஓர் வலிய சக்தி மறைந்துள்ளது என்பதை நீ மறந்தாய்.

பால.—எம்பெருமான் பலமென்று நீ நினைத்திருந்தாலொழிய வேறென்ன? ‘அவனன்றி ஓரணுவும் அசையாது கண்டாய்’.

தேவ.—அதுவேயுமன்றி, கடவுள் அளித்திருப்பினும், அவளதாகவே கூறும்படியான வேறுமொன்றுமுள்ளது: அஃதாவது: கற்பின் வலியே.

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை."

என்பது பொய்யாமொழியன்றோ!

"ஏலாத இடுக்கணிலும்
மேலான குணத்தினள்தன்
தோலாத அரணுவாள்."

என்றபடி கற்புள்ள ஸ்திரீ ஆயுதபாணிக்கும் மேலன்றோ? அவள், புலி கரடி துஷ்டர்கள் நிறைந்துள்ள கொடிய காடுகளிலும் மலைகளிலும் பயமின்றி யுலாவும் சக்தியுடையாள். அவளைக் காட்டு மூடனோ, குறவனோ, வேடனோ, கற்பைச்சிதைக்க அணுக வியலாது. அப்படிப் பலாத்காரமாய் அணுகுபவர்களைக் கற்பின் கிரணங்கள் நகித்துவிடுமே! துன்மார்க்கனாகிய,

"வேடனழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
ஆடன் மயில்போ லலமரா—ஓடிய" தமயந்தி,
"சீறி விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து" என்பதறியாயோ?

கற்பாகிய கவசம் தாங்கியுள்ளவர்களைப் பேய் பிசாசுகள் அண்டாவாம். 'தயாவதி' (Diana) என்பாள் கற்பின் சக்தியாலன்றோ கரடிகளையும் புலிகளையும் அடக்கி ஆள்கின்றாள்! அச்சக்தியாலன்றோ, தான் நீராடுவதைக் கண்ணுற்

றிருந்த ஆண்மகனை மானாக மாற்றினாள்! அநஸூயை திரிமூர்த்திகளையும் குழந்தைகளாக்கித் தாலாட்டியதும் அதனாலேயன்றோ! கல்லைக் கடலையாகச் சமைத்ததும் அதனாலே யன்றோ! ராஜ சபையில் மானம் போகாவண்ணம திரௌபதியைக் காத்ததும் அக்கற்பேயன்றோ! சாவித்திரி தனது கணவன் சத்தியவானை உயிர்ப்பித்ததும் அக் கற்பின் உதவியாலன்றோ! நளாயினி பொழுது விடியாமற்செய்ததும் அதனாலேயன்றோ! கண்ணகி யென்பாள் தன் கணவன் கோவலனை வீணே கொன்ற பாண்டியனது நாட்டைக் கொளுத்தியதும கற்பாகிய நெருப்பாலன்றோ! பின்பு அவள் பத்தினிக் கடவுளாகக் கொண்டாடப்படுவதும் அதன் மகிமையாலன்றோ! சந்திரமதியின் கழுத்தில வாள் மாலையாக விழுந்ததும அக்கற்பின் மகிமையே. ஆதிரை யென்பாள் தன் கணவன் சாதுவன்றானும் சாவுற்றானெனக்கேட்டு அழல் ஈமம புகக்குழி,

“ உடுத்த கூறையும் ஒள்ளொளி அறாஅ
தாடிய சாந்தமும் அசைந்த கூந்தலிற்
சூடிய மாலையுந் தொன்னிறம் வழாது’
‘ திருவின் செய்யாள்’’ போல் இனிதிருந்ததும்,

மதுரையின் கொடிமிடை வீதியின் வருபவளாகிய விசாகை தன் கருத்தில்,

“ தொல்லோர் கூறிய மணமீ தாமென
எல்லவிழ் தாரோன் இடுவான் வேண்டி

மாலைவாங்க வறியசெங்கை நீலக்குஞ்சி
நீங்காதாகியதும்" இக்கற்பின் செயலன்றோ !

இன்னும் விரித்துக்கூறுவதென் ? சீதைப் பிராட்டி தீயினில் இறங்க, அது குளிர்ந்திருந்ததும் இக்கற்பின் மகிமையே யன்றோ !

தேவர்களுக்குக் கற்பினிடத்துள்ள அபிமானம் அளவிறந்தது என்பதை இவை விளக்குகின்றனவன்றோ ? இவ்விதக் கற்பமைந்தமாதை வானவர்கள் ஆயிரக்கணக்காய்ச் சூழ்ந்து பாபங்களையும் பிணிகளையும் அவமானங்களையும் நெருங்கவொட்டாமல் அகற்றிப் பரிசுத்தமான அதிமானுஷ தத்துவங்களையே காதிற்புகட்டி நாளடைவில் ஆத்மஞானம் ஊட்டித் தங்கள் சேர்க்கையால் ஜ்வலிக்கும் ஓர் ஒளியைக்கொண்டு அசேதனசரீரத்தையும் சைதந்யமயமான உயிருக்குத் தக்க ஆலயமாகச்செய்வதுடன் உயிரையும்உடம்பையும் ஒரு தன்மைப்படுத்தி அவைகட்கு உண்மையிலுரியதாய, யாவர்க்கு மெய்தற்கரிய, சாக்காடில்லாத் தன்மையைத் தருவார்களன்றோ? ஆனால் காமம் தனக்கனுகுணமான, திருஷ்டி, சேஷ்டை, வாக்கு விகாரங்களினாலும், தடையின்றிச் செய்யும் ஈனமான கிருத்யங்களினாலும் அழுக்கை உள்ளே செலுத்தி, அவற்றின் கலவியினால் ஆன்மாவை மலினமாக்கி, சரீரத்துள்ளடக்கி, மிருகத்தன்மையைக் கொடுத்து, அதற்கு ஆதிநிலையிலிருந்த திவ்யஸ்வரூபத்தை முழுதும்

இழக்கச்செய்து, ஆசாபந்தங்கள் அதிகரிக்கக் கர்மபாசத்திற் பிணித்துத் துர்மரணமடையச்செய்து பேயும் பிசாசுமாய் உலகில் திரியச்செய்கின்றது. இதை விளக்கும்படி மணிமேகலை, உதயகுமரன் சரிதங் கூறுவேன்

மணிமேகலை யென்பாள் மலர்வனம் புகுந்து வதியுங்காலத்து உதயகுமரன் என்னு மிளவரசன்,

"மீயா னடுங்க நடுவினின் றோங்கிய
கூம்பு முதன்முறிய வீங்கு பிணியவிழ்ந்து
கயிறு கால்பரிய வயிறு பாழ்பட்டாங்
கிதைசிதைந் தார்ப்பத் திரைபொரு முந்நீர்
இயங்குதிசை யறியா தியாங்கணு மோடி
மயங்குகா லெடுத்த வங்கம் போல"க்

காமமாகிய களிற்றின் வசப்பட்டுச் செய்வன தவிர்வன அறியானாய்த் தன்னைத் தொடர்ந்து அவ்வனம் வந்தமை அறிந்து, தனக்கும் ஊழின் வாதனைபற்றி அவனிடத்துக் காதல் தோன்றியவிடத்தும், கற்பின்பக்கல் சழிபெரும் கருத்துள்ளாளாய்,

"புதுவோன் பின்னைப் போனதென் னெஞ்சம்
இதுவோ வன்னாய் காமத் தியற்கை
இதுவே யாயின் கெடுக வதன்திறம்"

என்று மனதைத் திடப்படுத்தி அவன் கண்ணிற்படாமல் ஒளிந்தனள். அக்கருத்துக்கிசைந்து அவனை நல்வழியிலேயே உய்க்கக்கருதிய மணிமேகலா தெய்வம்,

“ஆங்கவ னன்றியும் அவன்பாலுள்ள
நீங்காத் தன்மை நினக்கு முண்டு”

என்று கூறி மணிபல்லவம், என்னும் தீவில அவளை உய்த்துச்சென்றது. அவள் அவண் வழி திகைத்து மயங்குகையில் புத்த பீடத்தைக் கண்ணுற்று அதை வலமவந்து நமஸ்கரித்துத் தனது முற்பிறப்பின் வரலாற்றை அறிந்துகொண்டு பின்னும் தோன்றிய மணிமேகலா தெய்வத்தினிடம் பல தீங்குகளுக்கும் விலக்காகும் பல மந்திரங்கள் உபதேசமும் பெற்று ஓர் அறவம்பலத்துட் சென்றிருந்தனள். இவ்வாறிருக்க உதயகுமரன்,

“இடங்கழி காமமோட் டடங்கா னாகி,
உடம்போ டென்றன் னுள்ளகம் புகுந்தெ
னெஞ்சங் கவர்ந்த வஞ்சக் கள்வி” என்று,

மணிமேகலையின் கற்பைச் சிதைக்ககருதி அவ்வம்பலம் நள்ளிரவேபுக, ஆங்ஙனம் ஒருவன் கைவாளினால் வெட்டுண்டு துர்மரண மடைந்தான். உதயகுமரன் மாளவும், மணிமேகலை சிறைப்பட்டுத்தெய்வ அருளால் சிறையின் நீங்கி உதயகுமரன் தாயாகிய இராசமாதேவியின் வஞ்சனைகளைக் கடந்து ஆத்தும விசாரணைசெய்து தத்துவஞானம் எய்தினள். இவ்வுதய குமரன் போன்றவர்கள் தாம், இறந்தபிறகு பரலோக மடையாது தாம் மிகவும் நேசித்த உடலை விட்டுப்பிரிய முடியாது அதைப் புதைத்திருக்கும் புதிய சவக்குழியருகே பேயும் பிசாசுமாய் மயங்கித்தயங்கித் தங்கள் களேபரத்திடத்துள்ள

மோகத்தால் தாங்களே நீச நிலையையடைந்து வருந்தி யுழல்கின்றார்கள்.

பால.—வேதாந்த தத்துவவிசாரம் எவ்வளவு மனோகரமானது. அஞ்ஞானிகளுக்குத் தோன்றுமாறு, அது கடினமாயும், கடுமாறச்செய்வதாயுமில்லை. அது, மதுரமான மகதி கானத்தினும் இனியது; சிறந்த தெவிட்டாத் தெள்ளமுது போன்றது.

தேவ.—நில்லு தம்பி, ஏதோ சத்தம் தூரத்தினின்று காதில் விழுகிறது. சற்று உற்றுக்கேட்போம்.

பால.—அப்படித்தான்போலும் அண்ணா! அஃது யாதாயிருக்குமோ?

தேவ.—நம்மைப் போன்றிவ் விரவிற் சிக்கியவர்கள் சத்தமோ? அன்றி, எவனேனும் ஒரு வேடன் சத்தமோ? அல்லது ஒரு சோரன் தனது தோழர்களை அழைக்கும் சத்தமோ?

பால.—என் சகோதரியை சுவாமி ரக்ஷிக்க. சப்தம் மறுபடி கேட்கிறது; கிட்ட நெருங்குகிறது; நாம் கையுஞ் சத்தியுமாய் எச்சரிக்கையா யிருப்போம்.

தேவ.—நானும் கூவி வினவுகின்றேன். வருபவன் சிநேகிதனாகின் நல்ல சமயத்தில் வருகிறான். இல்லாவிடின் நாம் நம்மைக் காத்துக்கொள்ள முயலுவது நியாயமே. ஆயினும் எள்ளினுள் எண்ணெய்போல் எங்குமுள்ளொருவனான எம் பெருமான் நம்மைக்காப்பானாக.

## காலம்:—மூன்றாம் யாமம்.

*தேவபுருஷன் கண்ணனென்னும் ஆயன்வேடம் பூண்டுவர—*

**தேவ.**—நீயார்? எட்டி நில்லு; கிட்ட நெருங்காதே; நெருங்குவாயாகிற் படாத பாடுபடுவாய்.

**கண்.**—அது யார் குரல்? எனது பிரபுவின் குரலா? இன்னும் பேசுமையா, குரலைக் கேட்போம்.

**பால.**—அண்ணா! இவன் நமது வீட்டிடையன் கண்ணன்போலும்.

**தேவ.**—ஆ இனிய குழலூதும் கண்ணா! உனது கானத்தைக் கேட்டு ஆனந்தத்தின்மிகுதியால் தலையசைக்க ஆயிரந்தலை ஆதிசேடனும் வல்லனல்லன்! அதைக் கரதாளத்தால் தெரிவிக்க வாணனும் வல்லனாகானே! உனது கானத்தைக் கேட்டுத் தும்புரு நாரதரும் வானுலகில் ஒளிந்தனரன்றோ! நீ இவ்வளவு தூரம் எவருமறியாத இம்முடுக்குக்கு இவ்விருளில் எங்ஙனம் வந்தாய்? ஏதாவது கன்றுகாலி மந்தையினின்றும் ஓடிவிட்டதோ? அதைத் தேடி வந்தாயோ?

**கண்.**—எனது பிரபுவே! எனது பிரியமுள்ள யஜமானனது சீமந்த புத்திரரே! நான் வந்த காரியம் அவ்வளவு அற்பமானதன்று. நான், ஓடினமாட்டையும் ஓநாய் கொண்டுபோன ஆட்டையும் தேடிப்பிடிக்க வரவில்லை. இவ்விடத்து மேயும் ஆடுமந்தைகளெல்லாம் இப்பொழுது இருக்கும் என் விசாரத்துக்கு இலக்கல்ல. தங்கள்

கன்னி சகோதரி எங்கே? அவளேன் உங்களுடனில்லை?

**தேவ.**—நாங்கள் வழியிலே அவளை விட்டுப்பிரிந்து துன்புற்றிருக்கின்றோம். ஆனால் அது எங்கள் குற்றத்தாலன்று.

**கண்.**—ஐயோ! நான் அஞ்சியது மெய்தான்போலும்.

**தேவ.**—நீ அஞ்சியது யாது சண்ணு? சுருக்கிச் சொல்.

**கண்.**—சொல்லுகின்றேன் கேளுமையா. நமது புராணகதைகளில் பேய், பிசாசுகள், மாந்திரிகர்கள் உண்டென்று சொல்லப்பட்டிருப்பது மூடர்கள் பொய்யென்றெண்ணிலும் மெய்யே. இவ்வடவியின் மத்தியில் இருண்ட ஒருபெரிய ஆலவிருட்சத்தினடியில், துர்மந்திரங்களில் மிகவும் தேர்ந்துள்ள, மதிராவுக்கும் சூரன் மகளுக்கும் பிறந்து மோகனன் என்னும் பெயர்பெற்றுள்ள, சூனியக்காரன் இருக்கின்றான், இவ்வழியில் தாகத்தா லடிபட்டுச் செல்லும் பிரயாணிகளை மந்திரித்த நீரை அருந்தச்செய்து, ஒளி திகழும் முகத்தைக் கொடிய இழிந்த மிருக ரூபமாக மாற்றிவிடுகிறான். இவ்வனத்தில நான் மாடு மேய்த்துக்கொண்டிருக்கையில் இச்செய்தி என்காதில் விழுந்தது. இவ்விடத்தில் அவனும் அவன் மிருகங்கள் போன்ற பரிவாரமும் இரவுகள்தோறும் துர்நீதி யென்னும் துஷ்ட தேவதையை அருச்சித்து அநேக துஷ்க் கிருத்

தியங்களால் கொண்டாடுவதுடன், இவ்வழிச் செல்லும் பேதைப்பிரயாணிகளை மயக்கி வலைக் குள் சிக்கச்செய்யப் பலதந்திரங்கள் புரிவார் கள். இன்றுமாலை மாடுகளை மேய்ச்சற்றரையி னின்றும் ஓட்டிப்போய்த்தொழுவத்திலடைத்த பிறகு நான் ஓரமுகிய நதிக்கரையில் உட்கார்ந்து கானஞ்செய்து மெய்மயங்கி ஆனந்தித் திருக் கையில் கொட்டின் முழக்கம் கிளம்பியது. நான் என் கானத்தை நிறுத்திச் சற்று உற்றுக்கேட்டேன்; அது திடீரென்று ஓய்ந் தது; நித்திரை மூட்டி அதை வளரச்செய்வதற் கேற்ற நிசப்தம் உண்டாயிற்று. உடனே திவ்ய மங்களகரமாய்ப் பரமானந்தத்தை விளைக்கும் ஓ ரினிய இசை தோன்றியது. அதைக்கேட்ட அசேதனமான ஏகாந்தமும் தனது இயல்பை மாற்றி எப்பொழுதும் தான் இவ்வாறு கான மயமாயிருந்து ஆனந்திக்க விரும்பியதுபோலும். அஃது இறந்தவர்களையும் உயிர்ப்பிக்கும் திற முடையதாகும். அதனல் மெய்மறந்த யான் சற்று மயக்கந் தீர்ந்து உற்றுக்கேட்கவும் எனது ஆண்டவனது கண்மணி குணமாலிகையின் குரல்போல் இருந்தது. உடனே பயமும் வருத்த மும் மேற்பட்டு 'ஏ இளங்குயிலே! எவ்வளவு இன்பமாய்ப் பாடுகிறுய், சீக்கிரம் வலைக்குள் சிக்கிக்கொள்வாயே'! என்று பரிதபித்து தலை தடுமாற்றமாய் அவளிருக்கு மிடம் ஓடிப்போய்ப் பார்த்தேன். நான் அவ்விடம் சேரு முன்னமே

அவள் அம்மாயன் வலையுட் சிக்கி அவனை அடுத்த கிராமத்தானென்றெண்ணி, 'இவ்வழி இருவர் சென்றதைக் கண்டாயோ?' என்று கேட்டுக்கொண்டிருந்தனள். உடனே நான் உங்களைப் பற்றித்தான் கேட்டாளென்று ஊகித்து அவ்விடத்து ஒரு கணப்பொழுதும் நில்லாமல் உங்களைத்தேடி ஓடிவந்தேன். அப்புறம் யாது நிகழ்ந்ததோ அறியேன்.

பால.—இருளும் நிழலும் நரகமும் ஒன்று கூடினாலொத்த இந்த மையிருளடவியில் தனிமையாயுள்ள ஒரு பேதைப்பெண்ணை இவ்வாறு சோதிக்கலாமோ எம்பெருமானே! அண்ணா நீ நம்பிக்கை மூட்டிச் சொன்னவெல்லாம் என்ன பயன் பார்?

தேவ.—அப்படியல்ல தம்பி, நான் சொன்னவெல்லாம் மெய்யே. அவற்றி லொருமொழியேனும் இப்பொழுது மறுத்துச்சொல்லேன். மந்திரமோ மாயையோ வஞ்சனையோ சன்மார்க்கர்களை அதட்டிப் பயமுறுத்துமே யொழியக் கொடிய தீங்கு பயக்காது; திடுக்கிடச் செய்யுமே யொழிய அடிமையாக்க இயலாது. சன்மார்க்கர்களுக்குத் தீமைசெய்யத் தொடங்குவ வெல்லாம் அவர்களுக்குக் கடையில் நன்மையாகவே முடிந்து கீர்த்திக்கிடமாகும். துஷ்டர்கள் சிஷ்டர்களை நெருங்கவொண்ணாது தாங்கள் இழைக்க

நினைக்கும் துன்பவழி தங்களுக்கே துன்ப மிழைக்க நாசமுறுவார்கள்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.'

என்றார் பொய்யாமொழியாரும்.

நான்சொல்லியது பொய்யாகில் வானம் இடிந்துநம் தலையில் விழாதோ? உலகமேஅடியற்றுப் போய்விடாதோ? வா நாம் போவோம். தெய்வ சங்கல்பத்துக்கு விரோதமாக நாம் நடக்காமலிருப்போமாக. நரகத்துள்ள கோர ரூபமான யமபடர்கள் கோடிக் கணக்காய் அக்கெட்ட பாதகனுக் குதவிபுரிய அவனைச் சூழ்ந்திருப்பினும் அவனை யழிந்து அவன் வலையினின்றும் என் சகோதரியை விடுவித்து அவனையும் மானம் போகும்வண்ணம் மயிரைப் பிடித்திழுத்து அவனது தீய வாழ்க்கைக்கொத்த துர் மரணமடையச்செய்து யமலோகமனுப்புவேன்.

**கண்.**—ஏ! இளங்கன்றே! உமது அஞ்சாத் தீரத்தையும் மிகுத்த தோள்வலியையும் யான் மிக மெச்சுகின்றேன். இப்பாதகனைக் கத்திமுதலியன சிறிதும் வருத்தா. அவைகள் வீணே. அவன் தன் மாயாதண்டத்தை அசக்கித் தனது மந்திரபலத்தால் உமது உடம்பை அக்கக்காய்ப்பிரித்து நரம்புகளைப் பொடிப்பொடியாக்கி விடுவான். அவனை வெல்ல வேறு ஆயுதங்கள் வேண்டும்.

**தேவ.**—அப்படியாகில் நீ இவ்வளவெல்லா மறிந்து கூற எப்படி அவனை நெருங்கினாய்?

**கண்.**—எனது யஜமானியை எப்படித் தப்புவிக்கலா மென்று ஆவல் கொண்டு வியாகுல மடைந்திருக்குங் கால் எனது சிநேகனொருவன் கொடுத்த வேர் ஞாபகத்தில்வந்தது. அவன் பார்வைக்கு மிக அற்பனாயிருப்பினும் மருந்து மாயங்களுக்குரிய பச்சிலைகளிலும் மூலிகைகளிலும் மிகத் தேர்ந்தவன். அவனுக்கு என்னிடத்துப் பற்றுண்டு; அடிக்கடி பாடச்சொல்லி மகிழ்ச்சியுடன் கேட்டிருந்து வெகு ஆனந்தத்தை அனுபவிப்பான்; பிறகு அதற்குக் கைம்மாறாகத் தனது தோற்பையைத்திறந்துபல்வகைப்பச்சிலைகளையும் மூலிகைகளையுங் காட்டி அதன் அற்புத சக்திகளையும் கூறுவான். ஒரு நாள் மிகவும் அவலக்ஷணமான ஒரு வேரைக்காட்டி, 'இதையும் இதன் பிரயோசனத்தையும் எவருமறியார். இதைத்தரும் செடி கறுப்பும் முள்முள்ளாயுமுள்ள இலையொடும் பொற்காந்தியுள்ள அழகிய பூவொடுங்கூடி வேறு தேசத்தில் உற்பத்தியாகின்றது. ஆங்கண், இடையர்கள் அதன் மேன்மையறியாது அதைத் தினந்தோறும் காலால் மிதித்துச் செல்லுகிறார்கள். இஃது அநுமான்கொணர்ந்த அமிர்த சஞ்சீவியினும் அற்புத சக்தியுடையது. இதைக்கண்ட மாத்திரத்தில் பேய், பிசாசு, மந்திரம், சூனியம், விஷப்

பனி இவைகள் விலகிவிடும். இதன்பெயர் 'மாயா வைரி' என்று சொல்லி அக்கிழங்கிற் சிறிதளவு என்னிடத்துக் கொடுத்தான். இதுவரை அதை உபயோகிக்க அமயம்வாய்க்காதாக அதை மதிக்காமல் பையில் ஓர் புறம் போட்டிருந்தேன். இப்பொழுது இந்த ஆபத்தில் மனதுக்குவர, அதை உபயோகித்து அதற்கு அவன் கூறிய சக்தி உண்மையாய் உள்ளது என்றறிந்தேன். அதனாலேயே மந்திரவாதி மறைந்திருந்தும் அவனிருக்குமிடம் நானறிந்து அவன் மாயவலையின் உட்புகுந்து நீங்கின்றி வெளியே வந்தேன். நீங்களும் அந்த மூலிகையை வைத்துக்கொண்டு அம்மாந்திரிகன் மேல் பயமின்றிக் கட்கத்தை உருவிச்சென்று ஸ்படிக பாத்திரத்தை உடைத்து நீரைச்சிதறவடித்து மாயாதண்டத்தையும் பறித்துக்கொள்ளுங்கள். அவனும் அவன் பரிவாரங்களும் சண்டைக்குவர வெகு ஆடம்பரத்துடன் யத்தனித்துப் பயமுறுத்தினாலும் அவன் பின்வாங்க அவர்களும் ஓடி விடுவார்கள்.

தேவ.—கண்ணே, சீக்கிரம் அவ்விடத்துக்கு அழைத்துப்போ; துரிதமாய் நட; எங்கள் குலதெய்வம் எங்களை ஆதரிக்க.

"உன்னை நம்பினேனுனக்கே சரணம்
யென்னை யாதரிக்க வீதுவே தருணம்," (என்று கடவுளை வேண்டிக்கொண்டே செல்கிறார்கள்.)

இடம்.—காட்டின் வேறொருபுறம்.

காலம்.—நான்காம் யாமம்.

*அவ்விடத்தில் சகலவித ஸாம்ராஜ்யங்களும் பொருந்திய ஒரு மாளிகையில் மோகனனும் அவன் கூட்டமும் வீற்றிருக்கின்றனர். குணமாலிகை மந்திரத்தால் ஒரு நாற்காலியில் கட்டுண்டிருக்க, மோகனன் ஸ்படிக பாத்திரத்தைக் கொடுத்துக் குடிக்கச்சொல்ல அதைப் பக்கத்தில் வைத்து எழுந்திருக்க முயலுகின்றாள்.*

**மோ.**—ஏ மாதே! உட்கார். என் மாத்திரைக்கோலே அசக்கின மாத்திரம் அகல்யையைபோல் நீ கல்லாய் சசமைந்துவிடுவாய்; அல்லது நளகூபர மணிக் கிரீவர்கள்போல் மரமாய் மாறிவிடுவாய்.

**குண.**—ஏ பித்தனே, பேதையே! பெருமை பேச வேண்டாம். தேவாதி தேவன் விதித்திருக்குமளவும் உன் மந்திரத்தால் இந்த ஸ்தூலசரீரத்தைக் கட்டலாமேயொழிய என்மனதைக் கட்ட முடியாது......(என்று படபடத்துச் சினந்துக்கூற.

**மோ.**—மாதே, ஏன் இவ்வளவு படபடப்பு. இவ்விடத்தில் கோபம் என்பதே வாராதே. வருத்தம் இவ்விடத்தை எட்டியும் பாராதே. இரத்த புஷ்டியுள்ள மாநுடர்கள் மனதில் கொழுத்த யௌவன பருவத்தில் விரும்பும் எவ்வித மனோரதங்களும் இவ்விடத்தே நிரம்பியுள்ளனபார். ஸ்படிக பாத்திரத்தில் ஜ்வலிக்கும் வாசனை மிகுந்துள்ள மதுவைக்குடி. அது தாகத்தை ஒடுக்கி மனத்தில் மிகுந்த உற்சாகத்தை விளைக்கும். காம

ன் இன்ப விருப்பைமூட்டத் தன் குழுவினர்க்குத் தானே ஊட்டும் மதுவினும் அதிக மகிமையுள்ளது; இந்திரனுக்குச் சோமபானத்தாலுண்டாகும் உற்சாகமும இது தரும் உற்சாகத்துக்கு ஒப்பாகாது. அப்படியிருக்க நீ ஏன் வீணாய் உடலை வருத்துகின்றாய். இது மின்னலைப்போலத் தோன்றிய வக்கணமே அழியும் தன்மைத்து என்று மூடர்களுடனே எண்ணி உடலை வெறுத்தாய் போலும். அஃதன்று மாதே. உயிர் உள்ளளவும் குடித்துக் களித்து இன்ப வகைகளை நுகர்ந்து உனது மெல்லிய அவயவங்கள் குலுங்காமலும் நலுங்காமலும் இருக்க வன்றோ, சுவாமி உன்னைப் படைத்திருக்கிறார்! நீ அதை அறியாது அவரெண்ணத்தை அவமதித்து 'வேலைக்குப்பின் ஓய்வும், துக்கத்துக்குப்பின் சுகமும் வேண்டும்' என்னும் நியமத்தை மறந்து நீ ஜன்மமெடுத்ததை விபலமாக்கி இப்பொழுதடைந்திருக்கும் களைப்பைத் தீர்த்துக்கொள்ளேனென்கிறாயே? பேரெழில் மாதே! இதைக் குடித்தால் களைப்பு நீங்கி ஊக்கம் விளைந்து எல்லாச் சுகமும் உண்டாகும்.

துணை.—ஏ வஞ்சக! அஃது உன்னிடம் குடிகொண்டுள்ள பொய்யையும் சூதையும் போக்கி உண்மையையும் நன்மையையுங்கூடப் பயக்குமோ? நீ சொன்ன நிரபாயமானகுடில் இதுவேயோ? இந்தக் கோரரூபிகள்யார்? இந்த அவலட்சண

முகங்கள் என்ன ? ஏ மாயாவி! உன்னை நம்பிய ஏழைப்பெண்ணை இவ்வாறு பொய்சொல்லி வஞ்சிப்பாய். இஃதன்றியும், இன்னும் மயக்கும் பானத்தையும் உண்பித்து என்னை மிருகமாகவும் மாற்றயத்தனிப்பாயோ? கடவுள் என்மேல் கருணைகூர்க! நீ தரும் பானம் தேவேந்திரன் மனைவி களித்துண்ணு மமுதாயினும், அதை யான் உன்கையில் வாங்கி அருந்தேன். நல்லவர்களன்றிப் பிறர் நல்ல வஸ்துக்களை ஏவார்களோ? நல்ல தல்லாதது நல்லவர்களுக்கு ருசியாதே! துஷ்டான்ன பானங்களைப் புசித்தோ, குடித்தோ, உண்டாகும் ஸந்துஷ்டியைப் பரிசுத்தர்கள் பெரிதாக மதியார்கள்.

**மோ.**—உபவாஸமிருந்து உடலை வருத்துவது நன்றென்று கதறும் வைராக்கியம் பூண்டவர்களே! நீங்கள் எவ்வளவு மூடர்கள். எதற்காக இவ்வுலகில் எவ்வித சுகானுபவங்களுக்கு மேற்ற வஸ்துக்களெல்லாம் இவ்வளவு மிகுதியாக உண்டாக்கப்பட்டிருக்கின்றன! எதன் நிமித்தம் இப்புவியில் வாசனைமிகுந்த புஷ்பங்களும், மதுரமான பழங்களும், ஆடுமாடுகளும் அளவின் ப் பரப்பப்பட்டிருக்கின்றன. யாதுபற்றி சமுத்திரத்தில் கணக்கற்ற மீன்கள் நிறைந்து நீந்துகின்றன. எதன் நிமித்தம் பட்டுப்பூச்சிகள் பட்டு நூற்கின்றன. என்னபயன்கருதிப் பூதேவி, வெள்ளி, தங்கம், இரத்தினங்கள் முதலிய சிறந்த

பொருள்களைத் தனது கருப்பத்துள் அடக்கிவைத்திருக்கின்றனள். இவையெல்லாம் மனிதர் பொருட்டேயன்றோ; மானுடன் என்பானுக்குப் புதிது புதிதாகத் தோன்றும் சுகாபிலாஷையைத் தீர்த்து ஆநந்தத்தை யுண்பிக்கக் கருதியன்றோ! இவ்வாறு அவைகளை அனுபவியாது உலகமுழுதும் வைராக்கியம்பூண்டு மாமிசாகாரங்களை விட்டுக் காய் கிழங்குகளையே உண்டு அருவிநீரையே அருந்தி மரவுரியையே தரிப்பாராகில் சிருஷ்டிகர்த்தாவை அவமானஞ் செய்ததாகும். அப்பொழுது அவனது ஐசுவரியத்தினளவைச் சிறிது மறியாமலே அதை அவமதித்து, அவனையும், அடைகாத்து எவருக்கு மீயாத கருமிபோல் பாவித்து, இவ்வுலகக் குடும்பத்தில் அவனுக்குரிய புதல்வர்கள்போல நடவாது முறைதவறிப் பிறந்த கள்ளப்பிள்ளைகள் போல் நடப்பதாகுமன்றோ. மேலும் உலகுக்கே தன் பொருள்களின் மிகுதியால் இடையூறு விளையுமே. வானம் அப்பொழுது ஓரே பக்ஷிமயமாய் விளங்கி மறைபட்டுப்போம். ஆடுமாடுகள்பெருகி மனிதர்கள் கைவயப்படாமல் உலகத்தைக் காடாக்கிவிடும். சமுத்திரமும் காந்தியுள்ள மணிகள் நிரம்பப்பெற்று வயிரமிழைக்கப்பட்டுச் சோதிமயமாய் மின்ன நீர்மனிதர்கள் அக்காந்திமிகுதியைப்பார்த்து வரும் பழக்கத்தால் முச்சுடர்களையும் அலட்சியம் செய்

வார்களே. இவையெல்லாம் இயற்கை நெறியல்லவே. பெண்ணே நீயும் உனது வெட்கத்தை ஒழி; கற்பு என்னும் பொய்ந் நாமத்தை நம்பி ஏமாறாதே. அழகு என்பது தெய்வ கற்பிதமான ஓர் நாணயமன்றோ. அஃது எப்பொழுதும் வழங்கிவர வேண்டியதே யன்றி ஒருவரிடத்தும் ஒருங்கு சேர்தல் கூடாது. புதைத்துவைப்பது அதன் பிரயோசனமன்று. அதைப்பலருடனும் கூடி ஆண்டு அனுபவிப்பதே அதன் பயன். அழகை ஏற்ற பருவத்தில் அனுபவியாது விட்டால், அஃது, எவராலும் வேண்டப்படாமல் காட்டில் வாடியுதிரும் மலர்போலாம். அது காட்டில் எறித்த நிலவுபோலுமன்றோ. அழகு உலக வாழ்வின் மேன்மையை விளம்பரஞ் செய்யுமோர் மேலான ஆபரணம். மகளின் சரீரத்தினுள் உலாவிப் பிரகாசித்து மெச்சப்படுவதன்றோ அதனியல்பு. சாமான்ய அகத்தினழகேயன்றோ அகத்தினுள் அடங்கியிருக்கும். இத்தொழில் செய்துவர விளக்கமற்ற முகமும் துலக்கமற்ற கபோலமும் அமையாவோ? சந்திரனுக்கு மறுவுண்டாக்கிய முகமும், வில்லை வளைத்த புருவமும், கயலை ஒத்த கண்ணும், வள்ளை நிகர்த்த மூக்கும், பவளத்தைப்பழித்த வாயும், முல்லையைப் பழித்த முறுவலும், சங்கை நிகர்த்த கழுத்தும், வேய்போன்ற தோளும், காந்தள் காட்டிய கையும், அரம்பை போன்ற துடையும்,

அன்ன நடையும், மின்னலிடையும் அதற்கு வேண்டுமோ ? இவையெல்லாம் தக்க பயனுற வேண்டுமென்றோ ? ஏ மாதுசிகாமணியே!

"நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே."

என்றபடி அறியாமையே மேற் கொளாமல் இவற்றின் பயனை ஆலோசித்து இன்பம் துய்ப்பாயாக.

குண.—இந்த அசுத்தமான இடத்தில் வாய்திறந்து பேசவும்பொருந்தவில்லை. ஆனால் நீ உன் வஞ்சகப்பேச்சினால் மெய்போற்காட்டி என்னை ஏமாற்றிவிட்டதாக எண்ணுகிறாயே ; அதை யொழிக்கும்பொருட்டே சிற்சில மொழிகள் பகருவேன். துன்மார்க்கர்கள் வெகு நியாயம்போலப் பேசியதாகக் காட்டுவதையும் சன்மார்க்கர்கள் பேசாதொழியவேண்டி யிருத்தலையும் பார்க்க வெகு வருத்த முண்டாகின்றது. ஏ வஞ்சக! இவ்வளவு பெருக்கமாய்ப் பொருள்களைப் புவியில் படைத்திருப்பது நீ அவைகளை மிதமிஞ்சி அனுபவித்துக்களிப்புற்று, அக்களிப்பு மயக்கத்தில் இவைகளைப் படைத்தருளிய உலகமாதா விடத்து நன்றி மறந்து சிற்றின்பத்தில் உழலும் பொருட்டன்றடா பேதாய். அங்ஙனஞ் செய்தல் தருபை கொய்தற்கீந்த சூரியால் பசுவின் வாலை அறுப்பதற்கொக்குமன்றோ. ஆனால் அவைகளை அவள் தந்தது அவைகளைத் தக்கவழி

உபயோகித்து அனுபவிக்கும் சன்மார்க்கர்கள் பொருட்டே. வளம்படப் பொருள் படைத்தவர்கள், தாங்கள் தகாத வழிகளில் செலவிடுவதை இப்பொழுது நிராதரவாய் வருந்தும் ஒவ்வொரு நல்லவர்க்கும் தக்கவாறு கொடுத்து உதவுவாராயின் அவர் தாம் பொருள் படைத்ததற்குப் பயனுவதோடு உலகும் இடையூறு நீங்குவதன்றி, கடவுளும் உவப்பு அடைவாரன்றோ. இதுவன்றோ கடவுளைத் துதிசெய்யுமுறை. அவ்வாறன்றி மிதமற்றுச் சிற்றின்பத்தை அனுபவிக்கும் மயக்கத்தில் அவரை அறிந்து துதி செய்து அவர் பக்கல் நன்றி செலுத்தவு மிடமுண்டோ? இன்னு மிகை படக் கூறியென்! நீ கற்புடைமகளை இகழ்ந்து பேசுவாயன்றோ? சூரிய கிரணம்போலத் திகழும் நிர்மலமான அக்கற்பின் சக்தியை உனக்குக்கூறிப் பயன் யாது? உன் பாவிச்செவியில் அதனைப் புகட்டுவானேன்! அதன் மகிமையை உன்னால் அறியவுங் கூடாதே. உனக்கு உன்வழியி லுழல்வதே சரி. உனது சமத்காரத்தையும் உனது குறிப்புமொழியையும் நீயே வியந்து ஆனந்தமுறு. நீ நல்வழிப் படுதற்குரிய உபதேசம் பெறுதற்குரியையல்லை. ஆயினும் உன்னை நல்வழிப் படுத்தக்கருதிக் கற்பின் மகிமையைக்கூறி மெய்யறிவைப் புகட்ட முயலுவேனாகில் நான் பரவசமடையுமாறு எழும் உற்சாக மிகுதியால் இவ்

விடத்துள்ள மரமும் மட்டைகளுமிரங்கி இப் புவியும் கரைந்து, வாய்திறந்து, உன்னையும் உன் கணத்தையும மந்திரசாலையுடன் பாதலவுலகில் உய்க்குமன்றே.

**மோ.**—(தனியே) அவள் சொல்லுவது வெறுங் கட்டுக் கதையன்றே. யாதோ ஒரு தேவன் அவளிடத்துக் குடிகொண்டு இங்ஙனங் கூறுகின்றான் போலும். யான், அமரருளொருவனாயினும், வாசவனது வச்சிராயுதத்தின் ஒலியைக்கேட்டு நடுங்கும் துஷ்ட அசுரர்கள்போல், எனது மயிர் சிலிர்த்து உடம்பு நடுங்குகின்றது. ஆயினும், அவள் கூறினதை மதியான்போல் நடித்து, அவளை இன்னும் செவ்விதிற் சோதனைபுரிவேன்.

(அம்மாதினை நோக்கி) போதும், இந்தத் தத்துவங்கள் நிற்க. நீ கூறுவன யாவும் எமது கோட்பாட்டுக்குச் சிறிதும் பொருந்துவன வல்ல. இனி இதற்கெல்லாம் இடங்கொடேன். ஈண்டு அறைந்த யாவும் நின்மனத் துன்பத்தா லுண்டாய தளர்ச்சிபற்றிப்போலும். இதைச் சிறிது பருகின் அத்தளர்ச்சி நீங்கிக் கனவிலும் நினைதலரிய களிப்பினை யடைவாய்.

(மீண்டும் குடி என்று வற்புறுத்த.)

*அத்தருணம் அவளுடைய சகோதரர்கள் வாளுருவி ஆங்கு வந்து அடைந்து மோகனன் ஸ்படிக பாத்திரத்தைப் பிடுங்கிப் பூமியில் உடைக்கிறார்கள். அப்பொழுது போர் தொடங்கிய அவனும்அவனது பரிவாரங்களும் புறந்தந்துஓடினர். பிறகு கண்ணன்வேடம் பூண்டிருந்த தேவபுருஷன் கூறுவான.*

**கண்.**—அப்பாதக மந்திரவாதியை விட்டுவிட்டீர்களே. அவன் தடியைப்பிடுங்கி அவனைக் கட்டி வைத்திருக்க வேண்டும். அக்கோலைத் தலைகீழாகப் பிடித்து, அம்மாந்திரிகன் மந்திரத்தைத் தலைகீழாக உச்சரித்தாலன்றி நமது கண்மணியை அவன் மந்திரத்தின் கட்டினின்றும் விடுவிக்கவொண்ணாதே. ஆனாலும் இருங்கள். விசனப்படவேண்டாம். முற்காலத்தில் பிரசித்திபெற்ற மாந்திரிகனொருவன் எனக்குக் கூறியுள்ள ஒருவழி ஞாபகத்துக்கு வருகின்றது.

இவ்வனத்துக்குரியதேவதை வாஸந்தி என்று ஒருத்தியுளள். அவள் மூக்கலில் பத்ரன் மகனாகிய லோகபாலன் பெண்; மிகவும் பதிவிரதா சிரோமணி. அவள் தன் மாற்றாந்தாய் கோபத்துக்குப் பயந்து இக்காட்டிற்கு ஓடிவந்து வழி திகைத்துத்திரிய, இவ்விடத்தில் நர்த்தனஞ்செய்து விளையாடிக்கொண்டிருந்த தெய்வமகளிர் அவளைக் கண்ணுற்றுத் தேவலோகம் எடுத்துப் போய்த் தேவேந்திரன்முன் நிறுத்தினார்கள். அவன் அவளது வரலாற்றைக்கேட்டு இரங்கி

அவள் அழகையும் மேன்மைக்குணத்தையும் மெய்ச்சி, வாசனைத் தைலங்களால் மஞ்சனமாட்டி, நல்லுணவுகள் ஊட்டி, மானுடத் தன்மையைப் போக்கி இக்காட்டுக்குரிய தேவதையாக்கினேன். இப்பொழுதும் தனது பழைய அமர்ந்த கன்னித் தன்மை நீங்காது அந்திப் பொழுதில் வெளியே உலாவி, பேய், பிசாசுகள் இழைக்கும் துன்பங்களை நீக்கிச் செல்வது பற்றி இத்தேவதையை வருஷமொருமுறை இவ்விடத்து ஆடு, மாடு மேய்க்கும் இடையர்கள், பாட்டுக் கூத்துக்களாலும் புஷ்பார்ச்சனைகளாலும் வணங்கி உற்சவம் கொண்டாடுவது வழக்கம். அவளைத் தக்கவாறு துதிசெய்து கீதம்பாடி யழைத்தால் அவள் வந்து மந்திரத்தை நீக்கி மாயத்தை மாய்ப்பதாகச் செவியுற் றிருக்கின்றேன். இன்னும் தன்னைப் போன்ற கற்புடை மகளிரிடத்துப் பரிவு கொண்டு அவர்களுக்கு ஆபத்துக்காலத்தில் உதவுவாளென்றும் கேள்விபுண்டு. அவளை நாம் இப்பொழுது இனிய இசையால் அழைத்து நமக்கு வேண்டிய உதவியைத்தேடுவோம்.

பேரெழிலார்ந்த பெண்ணணங்கே! நல்
அன்பே யுருவா மரிவையர்க் கரசே!
மாற்றாந் தாயுனை வருத்திய பொழுதிக்
காட்டிடை வந்து கலங்கிய நாளிலுன்
அழுகுரல் கேட்டவ் வமரர்க் கிறைவன்
உன்பா லருள்கொண் டுன்னையவ் விசும்பில்
எடுத்துச் சென்றுனக் கின்னமு தூட்டி

மணசெய் யாட்டி மருமலர் சூட்டி
அணிபல பூட்டி யன்பு பாராட்டியிச்
செழிய வனத்திடைத் திரிதரு முயிர்களைக்
கருணையிற் பாது காத்திடா யென்று
வனதே வதையா வைத்தனை யன்றோ!
ஆதலி னல்யா மரும்பெறற் கற்பின்
திறத்தினிற் சொலுமுறை செவிக்கொ ளாயின்றே
கற்பி னொழுக்கமே கலனெனப் பூண்ட
மாதிவ ளிந்த வனத்திடை வஞ்சர்
மாயத்தி னுள்ளே மயங்கின ளியம்
மாய நீக்கியுண் மகிழ்வுண் டாக்கி
எங்கள் வேண்டுகோ ளீந்திடக்
கண்முன் வந்து கருணைசெய் யாயோ!
மங்கையர் தெய்வமாம் வாஸந்தி யன்னையே.

இங்ஙனம் பாடுகையில் வாஸந்திதோன்றிக் கூறுகின்றாள்:

## எண்சீராசிரிய விருத்தம்.

கொடியார்ந்த விப்பெரிய மரத்தின் கீழெங்
கொழுமணிகள் குயிற்றியநற் பச்சை வண்ண
நடையாடும் பெருவேகத் தேர்போய் நிற்ப
நாமதினின் றிறங்கிலந் தோயா வாய
அடியிணையித் தருவின்மேல் வைத்து நின்றே
மாமேய்க்கு மிடைக்குலத்துக் கரசே! யிங்குன்
கடியாத விண்ணப்பங் கருதி வந்தேங்
காரியமின் னினதெனக் கழறு வாயே.

இராகம் : உசேனி.—தாளம் : ரூபகம் :

கண்ணன்

*மாதிவடன்னைக் காக்கவேண்டுமே-வஞ்சனை செய்வோர்*
*மாயத்தினின் று நீக்கவேண்டுமே.*

*கற்பின்தெய்வமிக் காரிகை யம்மா - இக்காட்டிற் பாதகர்*
*கைவயப்பட்டுக் கலங்கினள் சும்மா.*

*வலையிற்சிக்கிய மானே போலவே - வருந்தினளிந்த*
*மாயக்காரர்கள் மயக்கிற் சாலவே.*

*தீயுங்குளிரச் செய்ததில்லையோ - சிலைவேடனீறாகச்*
*செய்ததுபோல் நீ செய்தல் தொல்லையோ.* [டுப்

*பெண்ணென்றாலொரு பேயு மிரங்குமே - ஒருபெண்பொருட்*
*பெரிதுதவி செய்தது குரங்குமே.*

*கற்பினிலிவளைக்காத்திடாய் நின்றே - காதகர்மாயக்*
*கட்டிலிருந்து கழற்றுவாயின்றே.*

வாஸந்தி.—

இராகம் : யமுனாகல்யாணி - ஆதிதாளம்.

*கற்புடை மாதரைக் காப்பாற் றுவதென்றன்*
*கடமையாகு மன்றே*
*கரைந்துளம் வருந்துமிக் கற்பரசியினது*
*கட்டொழித்திடல்நன்றே*

*மந்திரநீரையிம் மங்கைதன் முகத்திலும்*
*மார்பிலுமேதெளிப்பேன்*
*மஞ்சத்திலுமிவ் வனத்திலுந் தெளித்துநல*
*வாழ்விவள்தனக்களிப்பேன்.*

*மாயவாழ்க்கையர்செய் வஞ்சனை யோடிவள்*
*வருத்தமு நீங்கியதே*

மங்கையர் தங்கட்கு வன்றுணையாய்க் கற்பும்
வளம்பெற வோங்கியதே.

கற்பின் தெய்வமிக் காரிகை தனைநான்
காத்தது மிகநன்றே
கருதிபென் வானிற் செல்வேன் நல்லுயிர்காள்
களித்திருப்பீர் சென்றே.

நல்லொழுக் கந்தனி னிற்பவர் தமக்கு
நாளுங் குறையில்லை
ஞாலந்தனிலவர் புகழினுக் கொருவர்
நாட்டலாமோ வெல்லை.

கற்புடை யார்போற்கனத்ததெய் வம்வேறு
காணக்கிடையாது
கற்பேவுலகினைக் காக்குமென் றுலந்தக்
கற்பினும் பெரிதேது.

(என்று சொல்லிப்போகிருள்.)

**கண்.**—(வாஸந்தியை நோக்கி), வந்தனம் தந்தனம் தேவி! உனது மனம் எக்காலத்தும் குளிர்ந்திருக்க; உனது காடு எப்பொழுதும் தழைத்துவளர்ந்து ஓங்குக; உன்னிடத்து மல்லிகை, முல்லை, சண்பகம், நாகம், புன்னாகம், கேதகி, பாரிஜாதம், பாதிரி முதலிய பரிமளப்பூக்கள் என்ஞான்றும் மணங்கமழ்க; கற்பகம் முதலிய தேவதருக்கள் நன்மணம் பெறுவதும ஆகாயத்தை முட்டியெழும்பும் நினது வனத்தின் நனமணத்தாலேயன்றோ! அன்றியும் நின்னிடத்தே யுள்ள குங்குமப்பூக்கள் ஆற்றுநீர்ப் பெருக்கொடு கடலில்

சென்றமையாலன்றோ அந்திவானம் செந்நிற
மடைந்தது ; மேலும்,

> " ஆரமும் அகிலும் நாறும் அருவியுஞ் சுனையுமந்த
> வாரணம் பிடிகளோடு வாரிதோய் கானியாறு
> மீரமும் நிழலும் சாயுங் கனிகளும் யாவுமீண்டிக்
> காரிளம் பொழியுமந்தக் கானகத்தழகு கண்டார்.'

என்றது நின்னழகை நோக்கியன்றோ ! பின்னும நீ உன்னிடத்துவந்த விருந்தினரை எக்காலத்தும் பல்வகைப் பலன்களினுலுபசரிக்கின்றுயே. மேலும் உலகினிற்குறும் எல்லாப் பிணிகளையும் ஒழிக்கப்பல்வகை மூலிகைகளும் நிரம்பப் பெற்றுள்ளாய் ; நின்னை நம்பியன்றோ 'தனவந்திரி' என்பார் உதித்தார்போலும். இராமன் பாண்டவர் முதலியோர் நாட்டினிற்போற் காட்டினும் வதிய உதவி புரிந்ததும் நின்கருணையனன்றோ; உன்னுதவி யில்லாவிடில் ஆலயம் முதலிய யாவும் கட்டப்பட்டு அமைதல எங்ஙனம்; எல்லாப்பொருள்கட்கும் காரணமான மேகம் மழை வழங்குவதும் நின்னுதவியாலே யன்றோ ; இஃதிருக்க, இன்னும் ' சிங்கமும் துதிக்கை மாவும் சேர்ந்துடன்றிரிய'ப் பகைப்பொருள்கள ஒன்றுபட்டு வாழ்வதும் உனது பெருமையன்றோ ; பலபடப் பன்னி யுரைப்பானேன்? நின்கண் தோன்றும் மூங்கிலின் முத்துக்களன்றோ தேவர்களுக்கு ஆரமாகின்றன !

(பின்பு, குணமாலிகையை நோக்கி), போவோம், வா, கண்ணே! தெய்வ சகாயமிருக்குங் காலத்தே இக்கொடிய விடத்தினின்று மகலுவோம். ஒருகால் அம்மந்திரவாதி வேறு உபாயங்களால் நம்மை மறுபடி தன் வலைக்குட்சிக்கச்செய்ய யத்தனிக்கவுங்கூடும். ஒரு கணப்பொழுதளவும்வீண் போக்காமல் ஒரு பேச்சுக்கூடப் பேசாமல இப்பாதகன் நிலத்தைவிட்டு நீங்குவோம். இவ்விருண்ட காட்டில் நான் முன்சென்று வழிகாட்டுவேன். உங்கள் பெற்றோரில்லமும் சமீபத்திலேயே யிருக்கின்றது. அவ்விடத்தே உங்கள் தந்தையர் முடிசூடிய களிப்பிற் குடியானவர்கள் குரவைக் கூத்தாடி அகமகிழ்ந்துகொண்டிருக்கின்றனர். அவ்வேளை நாம் நால்வரும் புகுந்து அவர்கள சந்தோஷத்தை இரட்டிப்போம். வாருங்கள் நாம் வேகமாய்ச் செல்வோம். (சென்று அரண்மனையை அடைந்து குடியானவர்களை நோக்கி:—

நின்மினோ குடிகா ணின்மி னிறுத்துநுங் கூத்தை யிங்கு
நன்மைசேர் வான மாதர் நர்த்தனத் தினுமே லாக
மன்மத னுவக்கு மேனி மாந்தர்க ளரவ மின்றித்
தொன்மைசேர் கூத்தை யாடத் தோன்றுவர் கண்டீ ரன்றே.

(அச்சிறுவர்களின் தாய் தந்தையர்களை நோக்கி)

சீரார்ந்த தந்தையரே தள்ளை யாரே
தீதிலொரு சந்தோஷந் தெரிப்பே னும்மிவ்
வேரார்ந்து வளர்ந்தகிளை மூன்றை நோக்கு
மிளமையிலின் னோர்க்கிடையூ றெய்து வித்துப்

பேரார்ந்த விவர்பொறுமை வாய்மை கட்குப்
பெரிதுவந்து சிற்றின்ப வெற்றி பெற்ற
சீரார்ந்த புகழ்முடிசே ரிவரை யிந்த
திருத்தமத னுக்கிறைவ னியமித் தானே.

கலைந்திட ரின்று நீங்கள் களமுடை யீர்கா ணுங்கள்
குலந்தரு கிளைகள் மூன்றுங் குலவிய விளமைக் கண்ணே
துலங்குற வுலகி லென்றுஞ் சோதனைப் பட்டே ஞான
நலந்திகழ் பக்தி வாய்மை நண்ணினர் காணு மாதோ.

என்று சொல்லி அப்புதல்வர்களைப் பெற்றோரிடம் ஒப்புவித்துச் சண்ணன் வேடம்மாறித் தேவ புருஷன் கூறுகின்றான் :

**தேவ.**—நான் என்வானுலகம் ஏறுவேன். அஃது எல்லோராலும் புகழப்படுவதாயும் ஒப்புயர் வில்லாததாயும், ஆநந்தம் விளைவிப்பதாயு முள்ளது. அவ்வுலகம் மூப்புப்பருவம் அறியாது; எவ்வகை இன்பத்தையும் ஒருங்கே துய்க்க உரியது; காலவரையறை இயலப்பெறாதது; கதிராயிரம்ரவி கலந்தெறித்தா லொத்த அளவிடக் கூடாத ஒளியினை யுடையது; இன்னும்,

"வண்டின முரலுஞ் சோலை மயிலின மாலுஞ் சோலை
கொண்டல்மீ தணவுஞ்சோலை குயிலினங் கூவுஞ்சோலை
அண்டர்கோ னமருஞ் சோலை" என்றபடி பல வகையாக வியந்து கொண்டாடும் படியான சோலைகளை யுடையது. அச்சோலைகள் செந்தாமரை, வெண்டாமரை, செவ்வல்லி, கருங்குவளை முதலிய எக்காலத்தும் மலர்ந்து, நானா அன்

னம் முதலிய பறவைகள் நிறைந்து, சான்றோர் செய்த நூற்பொருள்போலாழ்ந்து, அவர் அறிவேபோல் தெளிந்து, அன்றோர் புகழே போல்பரந்து, அவரது ஹிருதயம்போல் குளிர்ந்துள்ள மானஸ ஸரஸுபோன்ற பலவாவிகள் நிறைந்திருக்கப்பெற்றன. அச்சோலைக்கண் செல்லும் ஆறுகள் காமதேனுவின் மடிசுரந்த பால் வெள்ளமேயாம். ஆங்கு மலர்களினின்று பெருகும் மகரந்தமே ஆங்குள்ள மரங்களைப் பொன்னிறமுடையதாய்ச் செழிப்பிக்கும்? கற்பகம் முதலிய தேவதருக்கள் நிலைத்து அவரவர்கள் அபீஷ்டங்களை அளிக்கவல்லன. அச்சோலைகளில் ஆரமு மகிலும் ஆரசும் துகிருமாசறு முத்து மணியும் பொன்னும் மயங்கி நிரம்பி யுள்ளன நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் திரையழகு காட்டச் செந்தாமரைகள் விளக்குப்போல் ஒளி செய்ய மதகின் ஒலி மத்தள ஒலிசெய்ய மாங்குயில்கள் தீங்குரலாற் றாங்கிசைபாடக் குவளைகள் கண் விழித்து நோக்க ஒரு நாடகசாலை போலத் தோன்றும் அச்சோலைகளின்கண் மன்மத ராஜனுக்கு இரதியுடன் மணம்புரிய இயற்றியதுபோல் விளங்கும் பல லதாகிருகங்கள் உள்ளன. அம்மண நிமித்தமாக வசந்தன் என்னும் அரசர்கோமான் தென்றல் அன்றில குயில் முதலிய சேனைவீரர்களுடன் ஆங்குவந்து எப்பொழுதும் வீற்றிருக்கின்றன போலும். இவ்வாறு மணம்புரிந்தமன்மதனும் இரதியும்பொன்

# அவன் அமரன்

ஆசிரியர்

அ. சீனிவாசராகவன், எம். ஏ.




ஜி. டி. சென்னை

இந்த நாடகத்தை நடிக்க விரும்பினால் —

1. சந்தோஷம், யாரிடமும் அனுமதி கேட்க வேண்டாம். உங்கள் மனத்தைத் திருப்தி செய்துகொண்டு ஆரம்பிக்கவேண்டியதுதான்.

2. நடிகர்களில், நன்றாகப் பாடத் தெரிந்த நான்கு பேர் அவசியம். பாடத்தெரிந்தவர்கள் இல்லையானால், வேறு ஏதாவது நாடகத்தைப் பற்றி யோசனை செய்வது நல்லது. பாடவேண்டியவை கம்பனுடைய அற்புதமான பாடல்கள் என்பதை உத்தேசித்துச் சொல்லுகிறேன்.

3 பணச்செலவு அதிகம் இல்லை.

பின்புறத்தில் நாலைந்து வளர்ந்த மரங்கள் அமைந்த மண் மேடையில், திறந்த வெளியிலே, நாடகத்தை நடிக்கலாம் அதுதான் நல்லது. நிலவு உள்ள இரவானால் நலம். 'பிரமாதமான சித்திரங்கள்' என்று பெயரளவிலே சொல்லிவிட்டு, வர்ணத்தைக் கொட்டி மெழுகி வைத்திருக்கிறோமே, அந்த 'ஸீன்கள்' தேவையில்லை. நடுவிலே அகன்ற வாசற்படி உள்ள ஒரு மண் சுவர், கூரை, சில மரங்கள் - இவையே பிரதமக் காட்சிக்குத் தேவை. மரங்களோ, திறந்த வெளியிலே அமைந்த நம்முடைய நாடக மேடைக்குப் பின்புறம், தாமாகவே வளர்ந்திருக்கின்றன. அவைகளை மறைக்கவோ செப்பனிடவோ வேண்டிய அவசியமில்லை. மரங்களைவிட, மரங்களைப் போல் ஏதாவது இருக்க முடியுமா?

இடைக் காட்சியும், முதல் இரண்டு பின் காட்சிகளும் நடைபெறும் போது, பிரதமக் காட்சியை மறைக்கவும், கடைசியில் வரும் பின் காட்சியின் போது பிரதமக் காட்சியின் முடிவைக் காட்டவும், நாடக மேடையின் குறுக்கே வேகமாய் நகரக்கூடிய ஒரு திரை வேண்டும். இதற்கு, சிவப்புத் துணியோ ஊதாத் துணியோ போதும்

இந்த நாடகம் முழுதும் கற்பனை

கவியுள்ளம் படைத்த ஒருவன். அவனுக்குச் சாவு வருகிறது. அவனுடைய கடைசி நாளையும், அப்போது அவனுக்கு ஏற்படும் பழைய நினைவுகளையும் சித்திரிக்க முயல்கிறது இந்த நாடகம்.

மூன்று விஷயங்களின் மேல் கற்பனை கட்டப் பட்டிருக்கிறது:

1 அம்பிகாபதியின் துயர வாழ்க்கை சாவிலே கலந்த பின், சோழனுடைய சபையை விடுத்து, நாட்டரசன்கோட்டையில் இருந்த (இருந்ததாகக் கற்பனை) ஒரு சிற்றரசன் ஆதரவில் கமபன் வசித்து வந்தான்.

2. நாட்டரசன்கோட்டையில், தற்போது 'கமபன் சமாதி' என்று நாம் குறிக்கும் இடத்தருகிலே, சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன், என்றைக்கோ ஒருநாள் கம்பன் இறந்தான்.

3. இறந்தது பங்குனி உத்திர இரவின் முடிவிலே - பங்குனி அஸ்தத்தன்று விடியற் காலத்திலே.

இம் மூன்று விஷயங்களுக்கும் சரித்திர பூர்வமான ஆதாரம் இல்லாமல் இருக்கலாம். இல்லவே இல்லை என்றாலும் பாதகமில்லை. ஆனால், இவை தான் நாடகத்தின் அஸ்திவாரம்.

நாடகத்திற்கு அடிப்படையாக இன்னொரு விஷயமும் உண்டு. அது கம்பன் மகாகவி என்பது தான்.

நாடகத்தை நீங்கள் அல்லவா நடிக்கப் போகிறீர்கள்! ஆகவே, மற்ற விஷயங்களை உங்கள் கற்பனைக்கு விட்டுவிடுகிறேன். அதிலே நம்பிக்கை இல்லாதவன் நாடகம் எழுதுவானேன்?

ஆசிரியன்

## பாத்திரங்கள்

1. கம்பர்
2. கற்றுச்சொல்லிகள்
3. பெரியவர் - (கம்பருடைய தோழர்)
4. வைத்தியர்
5. சோழ மன்னன்
6 அம்பிகாபதி - (கம்பருடைய குமாரன்)
7. சிற்றரசன்
8. பாண்டியனும், கட்டியக்காரன், பிரதானி முதலிய அவன் பரிவாரங்களும்
9. பார்வதி, மீனாட்சி, நட்டுவன் முதலியோர் அடங்கிய நடன கோஷ்டி
10. பௌராணிகர்

# அவன் அமரன்

## நாட்டரசன்கோட்டை

ஆயிரம் வருஷங்களுக்கு முன்............

கோட்டையை அடுத்த சிறு பரம்பொன்றின் மேல், ஐந்தாறு காட்டு மல்லிகை மரங்கள். அவற்றின் நடுவே ஓர் அழகிய பர்ணசாலை.

பர்ணசாலையின் உள்ளே போவோம். எதிரே சாளரத்தின் வழியே, கோட்டையின் கோபுர விமானம் தெரிகிறது. அதன் பின்புறம், செக்கர் வான ரத்த வெள்ளம்.

ஒரு கட்டிலில், கவிச் சக்கரவர்த்தி கம்பர் படுத்திருக்கிறார். சிந்தனைக்கும் கவிதைக்குமே வாழ்நாளை அர்ப்பணம் செய்தவர் என்பதைக் காட்டும் வெற்றிக் கோடுகள், அகன்ற நெற்றியிலே படர்ந்து, வெள்ளிய நுரை போன்ற கேசத்திலே கலக்கின்றன. கண்கள் மூடியிருக்கின்றன. எத்தனையோ கவிகள் தவழ்ந்த இதழ்கள், இன்னும் ஏதாவது ஒரு பாடல் உதயமாகுமோ என்று எதிர்பார்ப்பவை போல், சிறிது திறந்திருக்கின்றன. முகத்திலே கம்பீரமான அமைதி தவழ்கிறது.

தம்புராவை மீட்டிக்கொண்டிருக்கும் கற்றுச் சொல்லி, குறிப்பாகக் கம்பரையும், பக்கத்திலிருக்கும் வைத்தியரையும், பெரியவர் ஒருவரையும், இன்னொரு

*கற்றுச்சொல்லியையும் பார்த்துவிட்டு, தம்புராவை நிறுத்துகிறான்.*

*கோட்டையிலிருந்து, தணிந்து ஒலிக்கும் சங்க நாதமும் மேளமும் பர்ணசாலை அமைதியைக் கலைக்கின்றன. நகரா சப்தம் கேட்கிறது.*

*கம்பர், மெல்லக் கண்களை விழித்து, தணிந்த, தளர்ந்த குரலில்...........*

கம்பர்

**தம்பீ, அரசர் வந்துவிட்டாரா ?**

கற்றுச்சோல்லி

**இன்று மாலை வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார்கள். வந்ததும் வராததும் தெரியவில்லை. இது சாயங்கால நகரா.**

கம்பர்

**அந்தி வந்துவிட்டதா ? நல்லது. தம்பீ, கதவைத் திற.........என்ன இன்பமடா இந்தத் தென்றல் ! மல்லிகை வாசத்தைத் தாங்க முடியாமல் தள்ளாடி வருகிறது. ' மந்த மந்த நடந்தது வாடையே......... '**

கற்றுச்சோல்லி (பாடுகிறான்)

**நந்த நந்த வனங்களின் நாள் மலர்**
**கந்த முந்திய கற்பகக் காவினின்(று)**
**அந்தர் வந்தென அந்தி தன் கைதர**
**மந்த மந்த நடந்தது வாடையே.**

பெரியவர்

என்ன அருமையான பாடல்! பரத்வாஜன் தவத்தில் பிறந்த 'மூலமில் கனவான' அந்த அற்புத விருந்தை, தென்றலின் தெய்விகத்தை, இந்தச் சொற்கள் எப்படியோ......

கம்பர்

இல்லை, பயனற்ற சொற்கள்! தினந்தோறும் மாறுமல் நிகழும் இந்த அந்தி நாடக சௌந்தர்யத்தை வார்த்தையில் எப்படித்தான் சொல்ல முடியும்? இந்தத் தென்றலின் தீரா மயக்கத்தின் முன், சொற்களும் மயங்குகின்றன. சொற்களே இப்படித்தான்......... (பெருமூச்செறிகிறுர்.) தம்பீ, இதோ இரவு வந்து விட்டது. கிழக்கே, அமுத நெருப்புக் கனியும்...... என்னை மெதுவாக வெளியே எடுத்துச் செல்லுங்கள்.

வைத்தியர்

வேண்டாம், ஐயா! இங்கேயே இருங்கள். தங்கள் உடல் நிலை அவ்வளவுக்கு............

கற்றுச்சொல்லி

ஐயா, வைத்தியர் ஐயா சொல்லுவது சரிதான். தாங்கள் வெளியிலே......

கம்பர்

இல்லை, தம்பீ, வருத்தப்படாதே. இந்த நிலவை நான் பருகவேண்டும். இதைவிட உயர்ந்த கற்பம் உண்டா?

பெரியவர்

*ஐயா சொல்வது போல் செய்யுங்கள். இத்தனை நாளாகத்தான் வைத்தியர் மருந்தையெல்லாம் கொடுத்தோமே! ஊம்... மனசுக்கு அமைதியைவிடச் சிறந்த ஔஷதம் எது? என்ன, வைத்தியர் ஐயா! உங்களைத் தானே! தங்கள் மருந்து, மனசிலே துயரம் உழுத வடுக்களைப் போக்குமா? சஞ்சலக் கொடிகளை வேரறுக்குமா?*

வைத்தியர்

*அதெப்படி முடியும்! பிறவிப் பெரு நோய்க்கு மருத்துவன் எவனோ, அவனிடமே தாங்கள் குறிக்கும் ஔஷதம் பெறலாம்........... மெல்ல எடுத்துச் செல்லுங்கள். ஐயா, அந்தப் பக்கம் பிடியுங்கள். கவனமாக......அப்படி......இங்கேயே, இந்த மரமல்லிகை அடியிலேயே கட்டிலை வைத்துவிடுங்கள் ... நல்லது...ஐயா, ஆயாசம் ஒன்றுமில்லையே?*

கம்பா

*இல்லை. ஆனால் இந்த நிலவு என்னவோ செய்கிறது. மனசிலே, பழைய நினைவுகள் மலர்கின்றன.*

பெரியவர்

**...............நெடு வெண் திங்கள் எனும் தச்சன்**
**காத்த கண்ணன் மணியுந்திக்**
**கமல நாளத் திடைப் பண்டு**
**பூத்த அண்டம் பழையதென்று**
**புதுக்குவானும் போன்றுளதால்.**

கற்றுச்சொல்லி

ஓங்கா நின்ற இருளாய் வந்து
உலகை விழுங்கி மேன் மேலும்
வீங்கா நின்ற கரு நெருப்பின்
இடையே எழுந்த வெண் ணெருப்பே!

கம்பர்

*என்ன அற்புதமான நிலவு! இதற்கு வெண்ணெய் நல்லூர் வள்ளலின் அன்பைத்தான் உவமை கூறலாம். அன்றெழுதியதில் குற்றமில்லை. அதைப் பாடு, தம்பீ!*

கற்றுச்சொல்லி

வண்ண மாலை கை பரப்பி
உலகை வளைத்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண் மதியத்(து)
உதயத் தெழுந்த நிலாக் கற்றை
விண்ணும் மண்ணும் திசை யனைத்தும்
விழுங்கிக்கொண்ட விரி நன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்
புகழ் போல் எங்கும் பரந்துளதால்.

கம்பர்

*சடையப்ப வள்ளல்.........சடையப்ப வள்ளல்! அவருடைய புகழ் மட்டுமா பரந்தது? அவருடைய உள்ளத்தின் அகண்டமல்லவா என்னை வென்றது! கவிதையிலும் கலையிலும் தன்னை இழந்த பக்குவமான உள்ளமல்லவா? எங்கும் பரந்து, பற்ற முடியாத நிழல் போல், இவ்வண்டத்தைக் கவியும் அழகின்*

*இன்ப வேதனையை அவர் போல் உணர்ந்தது வேறு யார்? அதைச் சொல்லில் வடிவாக்கும் பேதமையில் ஈடுபட்ட என் போன்றவர்க்கு அவருடைய தளரா அன்பைப் போல் ஊன்றுகோலாய் அமைந்தது வேறு எது? என்ன அன்படா அது! நினைக்கும் போதெல் லாம் நெஞ்சம் நெகிழ்கிறது, உடல் சிலிர்க்கிறது, குரல் தழதழக்கிறது.*

கற்றுச்சொல்லியும் பெரியவரும்

[*கவலையுடன்*] *ஐயா............ஐயா!*

சம்பர்

*இன்று போலிருக்கிறது — ஆனால் எத்தனை வருஷங்களாகிவிட்டன! இதே போல், பால் போன்ற நிலவு. மேலே, தாரகை விரித்த முத்து விதானம்; அவருடைய அன்புக்கு ஆற்றாத என் இதயம் போல் எதிரே இருந்த தென்னை, காற்றில் அசைந்து, எதையோ தேடியது...... ஐயா, என்ன வார்த்தை அன்று சொன்னீர்கள்? — 'நீ கடவுள் அருள்பெற்ற கவி. நான் மறைந்துவிடுவேன்; ஆனால் இந்த உண்மை மறையாது. உன் சொற்கள் அகண்ட பரி பூரணத்தைத் தேக்குகின்றன. ஆகவே என்றுமுள்ள இறைவனுடைய அம்சம் பெற்றவை. அவைகளுக்கு அழிவில்லை' என்றீர்கள்...எனக்குக் கடவுள் அருள் இருந்தால் தங்களை இழந்திருப்பேனா?*

பெரியவர்

*ஐயா, சற்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்! இதென்ன, தாங்களே...*

[ *கோட்டையிலே நகரா ஒலி கேட்கிறது* ]

கற்றுச்சொல்லி

*கோட்டையிலே காவல் மாற்றுகிறார்கள்.*

கம்பா

*ஐயா, ஞாபகமிருக்கிறதா? திருவரங்கத்துக்கு முதலில் நான் வந்தேனே அந்த இரவு?*

பெரியவர்

*நன்றாக ஞாபகமிருக்கிறது. பெருமாள் உறையூருக்கு எழுந்தருளி யிருந்தார். பிராகாரத்தில், பெரிய திருவடியின் கோயில முன் நின்றுகொண்டிருந்தோம். கருடருடைய திருக்கோலத்தைக் கண்டு தாங்கள் பாடிய பாடல்கள் அப்படியே நினைவில் இருக்கின்றன.*

[*பாடுகிறார்*]

**அசையாத சிந்தை அரவால் அனுங்க,**
**அழியாத உள்ளம் அழிவான்,**
**இசையா இலங்கை அரசோடும் அண்ணல்**
**அருளின்மை கண்டு நயவான்,**
**விசையால் அனுங்க வடமேரு, வையம்**
**ஒளியால் விளங்க, இமையாத்**
**திசையானை கண்கள் முகிழா ஒடுங்க**
**நிறைசால் வழங்கு சிறையான்.**

**காதங்கள் கோடி கடை சென்று காணும்**
**நயனங்கள் வாரி கலுழக்**
**கேதங்கள் கூர அயர்கின்ற வள்ளல்**
**திருமேனி கண்டு கிளர்வான்,**

**சீதங்கொள் வேலை அலை சிந்த, ஞாலம்**
**இருள் சிந்த வந்த சிறையான்,**
**வேதங்கள் பாட, உலகங்கள் யாவும்**
**வினை சிந்த, நாகம் மெலிய.**

வைத்தியர்

*அற்புதமாக இருக்கிறது! கருடனுடைய சிறை வீச்சேதான் பேசுகிறதோ என்னும்படி நடக்கிறது பாட்டின் கம்பீரம்.*

பெரியவர்

*ஆம். பாட்டைக் கேட்டதும் இந்த உலகத்தையே மறந்தோம். ஐயா பாடி முடிந்ததும், எதிரேயிருந்த ஆரியபடாள் வாசல் வழியாக, கையில் நெய்ப் பந்தம் ஏந்திச் சிறுவன் ஒருவன் வர, அவன் பக்கத்தில் கோயிற் காவலைச் சேர்ந்த ஒருவன், சிறிய பேரிகை ஒன்றைத் தோளில் மாட்டிக்கொண்டு, ஒற்றைக் கொட்டுடன் வெளியே வந்தான். மேலத்திருமாளிகை ஐயங்கார், ஐயாவையும் என்னையும் பார்த்து, மலர்ந்த முகத்துடன், 'நாளைய தினம் இப்படித்தான் ஐயாவின் ராமாயணம் அரங்கேறப்போகிறது. பகவானிடமிருந்து வரும் இந்தப் பந்தத்தைப் போல்,அது தெய்வ ஒளி வீசும்; இந்த முரசைப் போல், என்றும் முழங்கித் தமிழின் புகழைக் காப்பாற்றும்' என்றார்கள்.*

கம்பர்

*திருவரங்கம் பெரிய கோயில்,...உறையூர்க் கோட்டை,...புகார்த் துறைமுகம்...சோழ சாம்ராஜ்யத்தின் சிற்ப மலர்கள், அதன் மகிமையின் வடிவங்கள் —*

இவை யெல்லாம் கண்டு அனுபவித்ததால் அல்லவா, அயோத்தியின் அரணையும், மிதிலை மாடங்களையும், இலங்கைக் கோட்டையையும், மனக்கண்ணால் காண முடிந்தது!

பெரியவர்

உண்மைதான். தங்களைப் போன்ற மகாகவிகள் ஒரு சமுதாயத்திலே உதயமாவது அபூர்வம். அவர்கள் தோன்றும் போது, அதற்கு முன் அந்தச் சமுதாயம் சாதித்த பெருமை யெல்லாம் அவர்கள் காவியத்திலே தோய்ந்துவிடுகிறது. சோழ சாம்ராஜ்யம் மகத்தானதுதான். காவிரியை மணந்த பெருமை போதாதென்றோ என்னவோ, கங்கையையும், தென்குமரியையும் சோழன் ஆட்கொண்டான். 'கடற் பரப்பிலே, புயலும், அலையும், வேறு நாட்டு மரக்கலங்களும், புலிக் கொடிக்கு வணக்கம் செய்கின்றன. பாய் மரத்தில் தங்கும் கடற் பறவைகள், அதன் மகிமையைப் பாடிப் பரவுகின்றன. புகார்த் துறைமுகத்திலே, கொற்கை முத்து, கொச்சித் தந்தம், யவன வெள்ளி, பாரசீக அத்தர் - உலகத்தின் செல்வமெல்லாம் - கடலிற் கலக்கும் காவிரியை எதிர்கொள்கின்றன; வற்றாத வளம் சுரக்கும் காவிரியின் மகிமையின் முன் மங்கி நிற்கின்றன. ' தண்ணீரும் காவிரியே, தார் வேந்தன் சோழனே, மண்ணாவதும் சோழ மண்டலமே!' ஆனால் இந்தப் பெருமை முழுதும், தங்கள் அருள் வாக்கிலேதான் முற்றுப் பெறுகிறது; நிரந்தரமாகிறது. என்றுமுள தென் தமிழின் இசை, மலய மாருதத்தில் தவழும் வரையில், சோழ சாம்ராஜ்யத்

தின் பெருமையும், தங்கள் காவியத்தின் குரலாக ஒலிக்கும்.

கம்பர்

யார் கண்டது? மனிதனுடைய சாதனைக்கு அமரத்துவம் ஏது? இன்றோ, நாளையோ, ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகோ, அது அழிந்துவிடும். அழிந்து போகும் இந்த உடற் குகையிலே, அழியாத ஆத்ம மலரைப் பயிர் செய்யும் பேரருள், ஏனோ அதன் வாசனையான மனித முயற்சியை நிரந்தரமாக்கவில்லை?...சோழனுக்கும் எனக்கும் இருந்த நட்பு அற்புதமானது. அதுகூடக் குலைந்துவிடும் என்று யார்தான் நினைக்க முடியும்? சோழ சாம்ராஜ்யத்துக்கு அதிபதி அவன். ஏழைக் கவிவாணன் என்று என்னை நினைத்தானா? தன் ராஜ்யம் முழுவதையும், தன்னையுமே, எனக்கு அடிமையாக்கினானே! அந்த நட்பையும், தமிழ்க் காதலையுங்கூட விதி மாற்றி விட்டதே!

பெரியவர்

ஆம், ஐயா, கைகேசியின் மனம் திரிந்துவிடவில்லையா? ஊழ்வினையை அளந்தது யார்? அகற்றியது யார்? 'விதியினுக்கு விதியாம் என் விற்றொழில்' என்று வீரம் பேசிய லக்ஷ்மணனே, பிறகு, 'வெஞ்சின விதியினை வெல்ல வல்லுமோ?' என்று தீர்மானிக்கிறான். நாம் என்னத்தைக் கண்டோம்? இறைவன் திருவுள்ளப்படி அண்ட சராசரங்கள் இயங்குகின்றன என்று நம்புவதைத் தவிர, நாம் வேறு என்ன செய்ய முடியும்?

கம்பர்

ஆனால், என் மகனையா விதி இதற்குக் கருவி யாக்கவேண்டும்? [பெருமூச்செறிந்து] அம்பிகாபதியை நீங்கள் நேரில் கண்டதில்லையே?

பெரியவர்

[வருத்தத்துடன் தலையசைத்து] இல்லை.

கம்பர்

ஏதோ, கலைமகள் அருள் பெற்றவன் என்றுதான் எல்லோரும் சொன்னார்கள்.

பெரியவர்

'மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை
என்னோற்றான் கொல் என்னும் சொல்.'

கம்பர்

[மனக் கசப்பும், பரிதாபமும் வேதனையும் தோன்ற நகைத்து] இல்லையே! கடைசியில், பாவி, நிலைதவறி விட்டானே! தனக்கும், எனக்கும், சோழ சாம்ராஜ் யத்திற்கும், தீராத வசையைத் தேடி வைத்துவிட் டானே...... அம்பிகாபதி, உன்னுடைய அறிவெல் லாம் எங்கடா போயிற்று? இந்த வயசிலே உனக்கு ஏனடா இந்தக் கதி வந்தது? என்னால் மறக்க முடிய வில்லை. மறக்கவே முடியவில்லை......ராஜசபையிலே நிசப்தம். உருத் தெரியாத தீங்கு ஏதோ அதனுள் பதுங்கி நிற்கிறது. இதோ சோழன் பேசுகிறான்... என் மானம் அழிகிறது. உள்ளம் துடிக்கிறது. உயிர் ஊசலாடுகிறது. சோழன் பேசுகிறான்......சோழனா? என் உயிர்க்குயிரான சோழனா இப்படிப் பேசுவது?

## இடைக் காட்சி

சோழன்

[கோபச் சிரிப்புடன்] ஆம், கவியரசே, இதைச் செய்தது யார் என்று நினைக்கிறீர்கள்?

கம்பர்

[தணிந்த குரலில்] யார்? யாராயிருந்தாலும் மரண தண்டனைதான் விதிக்கவேண்டும்.

சோழன்

நல்லது. யார் என்று தெரிந்தபின் தங்கள் தீர்ப்பை மாற்ற மாட்டீர்களே?

கம்பர்

அரசே, கவியுள்ளம் மிருதுவானதுதான். சகல ஜீவராசிகளையும் தானாக நினைத்து இரக்கம் கொள்வது கவியின் இயல்புதான். ஆயினும், நீதியின் ஆக்ஞா சக்கரத்தைக் கம்பன் இதுவரை எதிர்த்ததில்லை. இரக்கமும் கருணையும் என் அறிவின் தெளிந்த பார்வையை இதுவரை மறைத்ததில்லை. நாங்கள் கவிஞர். எல்லா மனிதர்களுடைய உணர்ச்சிகளையும், ஆசைகளையும், வெற்றியையும், தோல்வியையும், எங்களுடையவையாகவே நாங்கள் கருதுவோம். ஆனால், எங்கும் வியாபித்து, ஒருவரும் அறியாத வகையில் இயங்கிவரும் தர்ம நீதியின் வலிமையை நாங்கள் ஒப்புக்கொள்ளுகிறோம்......யாராய் இருந்தால் என்ன? குற்றம் குற்றமே!

சோழன்

[கசப்பு நகையுடன்] சொல்லக்கூட வாய் கூசுகிறது. இதைச் செய்தது, இந்தப் பாபத்தில் அழுந்தியது, யார் தெரியுமா ?......தங்கள் மகன், அம்பிகாபதி !

கம்பர்

[திகைப்புடன்] யார்? அம்பிகாபதியா? அவனா? அவன் ஒரு நாளும்......

சோழன்

[கோபமும் பரிகாசமும் தோன்ற நகைத்து] இப்படிப் பேசுவீர்கள் என்று தெரியும்......

கம்பர்

இல்லை, அரசே...நான்......

சோழன்

எதற்காக வீண் வார்த்தை? அதோ இருக்கிறான் அவனைப் பாருங்கள். அவன் முகத்திலேதான் உண்மை எழுதியிருக்கிறதே! கவிழ்ந்த தலையும், தரை நோக்கும் கண்களும், மௌனமும், குற்றத்தைப் பறையறைகின்றன. அம்பிகாபதி! ஏன் பேசாமல் இருக்கிறாய் ?

கம்பர்

[நிதானமாக] அம்பிகாபதி,இது உண்மையா......? ஏன் பேசாமல் இருக்கிறாய் ?

அம்பிகாபதி

பேசுவதற்கு என்ன இருக்கிறது ?

சோழன்

*பார்த்தீர்களா, வளர்த்த கடா மார்பில் பாய்ந்த கதையை! தமிழை வளர்த்தேன். தமிழ்க் கவியரசைப் போற்றினேன். என் இதயத்திலே அவருக்கு அரியாசனம் அமைத்தேன்......*

கம்பர்

[மெல்லிய குரலில்] *அரசே...*

சோழன்

[வெறியுடன்] *ஆனல் கண்ட பலன் என்ன? இதோ என் இதயம் பிளந்துவிடும் போல் இருக்கிறது! என் மானம் அழிந்துவிட்டது! தலைமுறை தலைமுறையாக மாசு மறுவில்லாமல் வளர்ந்துவந்த சோழ வம்சப் புகழ் தீய்ந்துவிட்டது!*

கம்பர்

*அரசே, சிறிது நான் சொல்வதை......*

சோழன்

[வெறுப்புடன்] *என்ன சொல்லிவிடப் போகிறீர்? உம்முடைய சொல்லால் இனி மயங்கப் போவதில்லை. எல்லாம் நீர் கொடுத்த இடம். உம்மால் விளைந்த வினை. கவிதையாம், அழகாம், இலட்சியமாம்! என்ன கவிதை வேண்டியிருக்கிறது? நீதியை வேரறுத்து, தர்மத்தைப் பொசுக்கி, நேர்மையை ஒடித்துச் சண்டாளச் செய்கையில் இறங்கும் கசடர்களுக்குக் கவிதை என்ற போர்வை வேறு?*

கம்பர்

[கோபத்துடன்] *அரசே......* [தணிந்த குரலில்] *ஆனல் நான் கோபம் கொள்ளலாகாது. கோபிக்க*

எனக்கென்ன உரிமை இருக்கிறது? என் கையே என் கண்ணைப் புண்ணாக்கிவிட்டது......அரசே, இனி இங்கு எனக்கு வேலையில்லை. ஆனால் ஒன்று சொல்லு கிறேன். அம்பிகாபதி.........[நகைத்து] அம்பிகாபதி என் மகன் என்று நினைத்துப் பேசினாய்! நேர்மை தவறுவேன் என்றாய்! கவிதை என்பது போர்வை என்றாய்! ஆனால், சோழா! ஒன்று மறந்துவிட்டாய் - என் மகன் உன்னுடைய மகன்; உன் மகள் என் மகள் என்பதை - நீ, நான், உன்னுடையது, என்ற பேதங்கள் நட்பு உலகிலே இல்லை என்பதை. பரிசில் பெற்று உயிர் வாழும் நடை - பிணம் என்று என்னை எண்ணிவிட்டாய். மனிதன் என்பதை மறந்தாய். கவிஞன் என்பதையும் மறந்தாய். மனிதத்தன்மை யின் வானமான இலட்சிய உலகில், அளவற்ற நம்பிக்கை கொண்டு, அதுவே உயிராக வாழ்ந்து வரும் கவிஞன், தான், தன்னுடையது என்ற எண் ணங்கொண்டு, நேர்மை தவறிவிடுவான் என்று நினைக் கிறாயா? ராமனுடைய தர்ம நெறியைச் சொல்லால் தொடர்ந்து சென்ற எனக்கு, தர்மம் இன்னது என்பது கூடத் தெரியாமற் போய்விடுமா? நான் கவிஞன் என்பதை நீ மறந்துவிட்டாய். ஆனால், நான் மறக்கவில்லை. நீ கேட்டாயல்லவா, என்னைத் தீர்ப் பளிக்கச் சொல்லி? நல்லது: போகுமுன் என் தீர்ப்பை உறுதி செய்கிறேன். என் மகன் கௌரவத்தைக் காப்பாற்ற, என் சோழ வம்சப் பெருமையை நீதியால் நிலைநாட்ட, **உன்னுடைய** மகன் அம்பிகாபதிக்கு... மரண தண்டனை!

[சபையில் கலக்கம்]

சோழன்

[திகைப்புடன்] ஐயா...ஐயா!

கம்பர்

இல்லை அரசே! இனி எனக்கு இங்கு வேலை இல்லை. நான் போகிறேன்.

[இடைக் காட்சி முடிகிறது]

* * *

கம்பர்

எங்கே போவது? எங்கு சென்றாலும் என் துயர நிழல் கூடவே வருகிறதே! இந்தப் பரந்த உலகிலே, நிம்மதியாக, கௌரவத்துடன், தலை நிமிர்ந்து நடக்க, ஏழைக் கவிஞனுக்கு, எங்கும் இடமில்லையே!

பெரியவர்

ஐயா, தாங்கள் இப்படி வருந்தலாமா? தமிழ் மரபுக்கே அழியாப் புகழ் தேடிவைத்த தாங்கள் தலை நிமிர்ந்து நடக்க முடியாவிட்டால் வேறு யாரால் முடியும்? தங்கள் பேரில் என்ன குற்றம்?......அம்பிகாபதியின் பேரில்தான் என்ன குற்றம்!

கம்பர்

ஆம், அவன் பேரிலும் முழுக் குற்றமும் இல்லை. சோழன் மகளுடைய எழிலும், தன் இளமையுமே அவனை வென்றன......எத்தனை பேருக்கு அணையாத தீயை நெஞ்சிலே மூட்டிவிட்டு மறைந்தான்! அடபாவி! இத்தனை வருஷங்களாயும் என்னால் பொறுக்க முடியவில்லையடா! அம்பிகாபதி, மகனே! ......ராமனைக் காட்டுக்குத்தானே அனுப்பினான் தசரதன்!

அது பொறுக்காமல் உயிர்விட்டானே! நான் உனனைச் சுடுகாட்டுக்கே அனுப்பிவிட்டு உயிர் வாழ்கிறேனே! என்னவெல்லாம் நினைத்தாயோ! உணர்ச்சி ஓய்ந்து, இளமையின் இயல்பையும், காதலின் வேகத்தையும் அறிய முடியாமல், வேதாந்தக் கணப்பில் குளிர் காயும் கிழட்டுப் பிணம் என்றா? மனிதனுடைய சட்டங் களுக்கு அப்பால் நின்று, சஞ்சலம் விளைக்கும் காத லின் உன்னதத்தை உணராமல், நேர்மை என்ற பட் டையால் கண்ணை மூடிக்கொண்டு, நேர்மை மறந்த பித்தன் என்றா? அன்று நீ என்னைப் பார்த்த பார்வையில் என்னவெல்லாமோ தோன்றியதடா! அம்பிகாபதி, மகனே!... இனி எப்போதடா உன்னைக் காண்பேன்?

வைத்தியர்

ஐயா, தாங்கள் இப்படி அரற்றக் கூடாது. தங் கள் உடம்பு அவ்வளவுக்கு ...

பெரியவர்

ஐயா, நாங்கள் என்ன சொல்லப் போகிறோம்? தங்களைக் கவிஞராகப் படைத்த திருவருள், தங்க ளுக்கு இந்தத் துயரத்தை யெல்லாம் ஏதோ காரண மில்லாமல் அளித்திருக்குமா? சோழ சாம்ராஜ்யத் தின் பெருமையை அனுபவித்ததாலேதான், அயோத் தியையும், மிதிலையையும், இலங்கையையும் வர்ணிக்க முடிந்தது என்றீர்கள். ஏன், அது போலவே, மனித னுடைய துயரின் எல்லையைத் தாங்கள் நேரிலே கண் டால்தான் கவிஞராகத் தாங்கள் வாழமுடியும் என் பது திருவருளின் கருத்தோ என்னவோ! துயரத்

திலேதான் மனிதனுடைய மாற்று உயர்கிறது. இரக்கம் என்ற அதன் ஒளி ஓங்குகிறது. தசரதனுடைய சோகத்தையும், ராவணனுடைய அஞ்சா நெஞ்சைக் கலக்கிய துயரத்தையும், தாங்கள் இவ்வளவு தத்ரூபமாக வர்ணிக்க முடிந்தது தங்கள் துயரத்தால் அல்லவா? புழுங்கி மறுகும் தங்கள் இதயத்தையல்லவா அங்கே கொட்டிவிட்டீர்கள்? மேல் காற்றில் இசையெழுப்புவது பட்டுப்போன மரமா? தழையும் தளிரும் உள்ள மரம் போன்ற கவிஞனைப் படைத்து, கூடவே, துயரப் புயலையும் கடவுள் அனுப்புகிறான்.' கவிதை இசை தோன்றுகிறது. இதைத் தங்களுக்கு நான் சொல்லவேண்டுமா?

கம்பர்

உண்மைதான். ஆனால் அந்தக் கடமையையும் நான் நிறைவேற்றவில்லையே! வான்மீகன் கவிதையில் சிதறி ஓடிய சிறு துளிகளைத் தவிர, நான் சேர்த்தது வேறொன்றும் இல்லையே! அழகு, அருள், அறிவு, மனிதனுடைய பெருமை யாவும்—கோபம், கொடுமை, பாதகம், மனிதனுடைய இழிவு யாவும் — வார்த்தை வலை வீசிப் பிடிக்க முயன்றேன். இரவு முழுதும் நட்சத்திரங்களைப் பிடிக்க வான வெளியிலே வலை வீசி, மின்மினிகளைப் பிடித்துத் திருப்தி அடையும் பைத்தியக்கார வலைஞன் போல் நிற்கிறேன். என்னைச் சுற்றி வார்த்தை வலைகள் ஒரே சிக்கலாய்ச் சிதறுண்டு கிடக்கின்றன. ஆனால் இறைவனுடைய அளவிலா விளையாட்டின் மருமத்தில் ஒரு பகுதியாவது வலையில் அகப்பட்டதா? இந்த முயற்சியில் ஈடுபட்டு சாதாரண மனிதன் பெறக்கூடிய இன்பங்கள் பலவற்றை

யும் இழந்தேன்......என்னுடைய வாழ்க்கை ஆச்சரியமானது. கானல் நீரை நம்பி, கையிலிருந்த தண்ணீரை வாரி இறைத்தவன் கதையாக முடிந்தது.

பெரியவர்

எட்டாத வானத்தை எட்டிப் பிடிக்க முயல்வதில்தானே மனிதனுடைய பெருமையெல்லாம் கிடக்கிறது. கூட்டிற்குள் அடங்கி, கிடைக்கும் சோற்றைக் கோதிக் கோதி, தன்னைச் சிறைவைத்தவன் குரலில் பேச முயலும் கிழட்டுக் கிளியா மனிதன்? கட்டைத் தெறித்து, எல்லையற்ற பெருவெளியில் கலக்கச் சிறை விரிக்கும் கருடனல்லவா? ராவணனுடைய வலிமை அறியாதவனு ஜடாயு? தன்னால் ராவணனோடு போரிட்டு ஜயிக்க முடியும் என்று நினைத்தா போர் தொடங்கினன்? வெற்றியோ, தோல்வியோ, தன் கடமை தர்மத்தின் சார்பாகப் போர்புரிவது என்றல்லவா நினைத்தான்? அவன் சாதித்தது ஒன்றுமில்லை. உயிரைத்தான் இழந்தான். ஆனால் அதுவன்றோ தெய்வ மரணம்!

சம்பர்

தெய்வ மரணம்......தெய்வ மரணம்......நினைவு எங்கெல்லாமோ போகிறது......... தம்பீ, எங்கே, அதைப் பாடு!

கற்றுச்சொல்லி

"சரணெனக்(கு) ஆர்கொல்?" என்று
ஜானகி அழுது சாம்ப,
"அரண் உனக்(கு) ஆவென்! வஞ்சி,
அஞ்சல்!" என்(று) அருளின் எய்தி,

**முரணுடைக் கொடியோன் கொல்ல,**
**மொய்யமர் முடித்துத் தெய்வ**
**மரணம் என் தாதை பெற்ற(து)**
**என்வயின் வழக்கன்ருமோ ?'**

கம்பர்

*ஏன், நிலாவைக் காணோம்......இந்த இருட்டு என்னவோ செய்கிறது. ஏன் இந்தப் பந்தங்கள் இப்படிக் கூத்தாடுகின்றன ?......வானர சேனை......நாக பாசம்......வைகறை வந்துவிட்டது......இதோ சடையப்ப வள்ளல்......சோழன்......அம்பிகாபதி......அம்பி...கா...ப...தி !*

வைத்தியர் [*பதட்டத்துடன்*]

*ஐயா, என்ன இது......*[*அருகில் செல்லுகிருர்*]

பெரியவர்

*துயரத்தில் தன்னை மறந்து ஏதாவது......*

வைத்தியர்

*இல்லை, இல்லை......ஐயா, இங்கே வாருங்கள்......சற்றுத் தலையைத் தாங்கிப் பிடியுங்கள்......*

[*பேரிகை முழங்குகிறது*]

கற்றுச்சொல்லி

*அரசர் வருகிருர்.*

[*சிற்றரசன் வருகிருன்*]

பெரியவர்

*இனி யார் வந்தாலென்ன? அரசே, அரசர்க்கரசன், காலதேவன், முந்திக்கொண்டு விட்டான்.*

கம்பநாடன் வந்த காரியம் இன்றோடு முடிவடைந்து விட்டது.

கற்றுச்சொல்லி

[விம்மலுடன்] என்ன, ஐயா...... ஐயா...... இறந்து விட்டாரா?

அரசன்

[விசனக் குரலில்] கவியரசர் இறந்துவிட்டாரா?

பெரியவர்

[துயரமும் பெருமிதமும் தோன்ற] இல்லை; இன்று தான் பிறந்தார்! கம்பனென்ற மனிதன் மறைந்து விட்டான். ஆனால், கவியரசன் கம்பன் இன்றுதான் தோன்றினான். ராமாயணம் அரங்கேறிய தினமல்லவா இது? கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்குச் சாவேது? கவிதை அமுதம் உண்டவன் அவன். அதை உலகுக்கு அருளியவன் அவன். அவனுக்கு அழிவேது? அவன் அமரன்!

[மௌனம். மெல்லிய குரலில் பெரியவர் பாடத் தொடங்கவே, கற்றுச்சொல்லிகளும், சிறிது தயங்கி, பிறகு கூடப் பாடுகிறார்கள்]

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்,
நிலை பெறுத்தலும், நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்(டு) உடையார் அவர்,
தலைவர், அன்னவர்க்கே சரண் நாங்களே.

## பின் காட்சி 1

பாண்டியன் சபா மண்டபம்

[ *தம்புரா மட்டும் ஒலித்துக்கொண்டிருக்கிறது. வெகு தூரத்தில் நாட்டை ராகத்தை நாதஸ்வரம் இசைத்துக்கொண்டிருக்கிறது. அதன் ஒலி மறைகிறது. தொலையிலே மெல்லிய சங்க நாதம். வீணைகள் நாட்டை ராகத்தை மிருதுவாக ஆலாபனம் செய்கின்றன. பிறகு 'உலகம் யாவையும்' என்ற பாட்டை வாசிக்கின்றன. அவற்றின் ஒலி மங்குகிறது.* ]

நட்டுவன்

[*தணிந்த குரலில்*] பாண்டியன் வரும் நேரமாகிவிட்டது. நான் சொன்னது ஞாபகம் இருக்கிறதா, மீனாட்சி? தெளிவாகக் கம்பீரமாகப் பாடு. பார்வதி! பாவத்தோடு இழைந்து அபிநயம் பிடி. பாட்டிலே உன்னை மறந்துவிடு. கம்பனுக்குப் பிறகு, இந்த முந்நூறு வருஷமாகச் செய்யாததை இன்று செய்யப்போகிறோம். கம்பராமாயணம் அற்புதமான காவியம். சங்கீதமும், பரதமும் அதைக் கெடுத்துவிடக் கூடாது.

[*நாதஸ்வர இசை நெருங்குகிறது*]

மீனாட்சி

நல்லது.

பார்வதி

முதலிலே, உலாவியல்தானே?

நட்டுவன்

ஆம், பிறகு இரணியன் வதை. மறந்துவிடாதே

[ *சங்கநாதம்...பேரிகை முழக்கம்* ]

கட்டியக்காரன்

[உரத்த குரலில்] ***அரசர்க்கரசன், ப...ரா...க் !***

*[அரசனும், மந்திரி, பிரதானிகளும் வந்து சபையில் அமர்கிறார்கள்]*

*[நிசப்தம். பிறகு வீணைகள் ஒலிக்கின்றன. கீழ் வரும் பாடலை இசைக்கத் தொடங்குகின்றன. மீனாட்சி பாடுகிறாள். பார்வதி அபிநயம் பிடிக்கிறாள். சதங்கை சப்தமும், நட்டுவனுடைய தாளமும் ஒலிக்கின்றன. ]*

**மானினம் வருவ போன்றும், மயிலினம் திரிவ போன்றும்,**
**மீனினம் மிளிர்வ போன்றும், மின்னினம் மிடைவ போன்றும்,**
**தேனினம் சிலம்பி யார்ப்ப, சிலம்பொலி புலம்பி ஏங்க,**
**பூநனை கூந்தல் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.**

*[ பாட்டு முடிந்ததும் சில கணங்களுக்குச் சுருதி யின் சப்தம். பிறகு கீழ்வரும் பாடல் தொடங்கப்படு கிறது. இருவர் பாடுகிறார்கள். ஒன்று ஆண் குரல். பார்வதி அபிநயம் பிடிக்கிறாள் ]*

**ஆரடா சிரித்தாய், சொன்ன அரிகொலோ ? அஞ்சிப் புக்க**
**நீரடா போதா தென்று நெடுந்தறி நேடினாயோ ?**
**போரடா! பொருதியாயின் புறப்படு புறப்ப ' டென்றான்,**
**பேரடா நின்ற தாளோ(டு) உலகெலாம் பெயரப் போவான்.**

**பிளந்தது தூணு மாங்கே ; பிறந்தது சீயம் ; பின்னை**
**வளர்ந்தது திசைக ளெட்டும், பகிரண்ட முதலா மற்றும்**
**அளந்த(து) அப்புறத்துச் செய்கை யாரறிந்து அறைய**
**கிளர்ந்தது ககன முட்டை, கிழிந்தது மேலும் கீழும் கிற்பார்?**

*[பாட்டு முடிந்ததும், வாத்தியங்கள் அந்த ராகத் திலேயே மயங்கிப் பின்னி, கம்பீரமாகத் தணிகின்றன.*

*இரண்டாவது விருத்த ஆரம்பத்தில் வாத்திய கோஷ்டியில் சேர்ந்துகொண்ட சங்கு, பாட்டு முடிந்ததும் சீறுகிறது ]*

*　　*　　*

## பின் காட்சி 2

கோயில் அர்த்த மண்டபம்

*[ தம்புரா ஒலி. வீணைகள் 'உலகம் யாவையும்' என்ற பாட்டை மெல்ல இசைத்துத் தணிகின்றன ]*

பௌராணிகர்

*[ நாட்டை ராகத்தோடு இசைந்து பேசுகிறார் ]*

*எங்கும் பரந்த பரம்பொருள், பக்தனுடைய வேண்டுகோளுக் கிணங்கி, தூணில் தோன்றி, இரணியனை வதைத்து, உலகத்தைக் காப்பாற்றி நின்றது என்ற கதையை, ராவணனுடைய சபையிலே விபீஷணன் சொல்ல, 'அழிவினை எய்துவான், அறிவு நீங்கியவனை' ராவணன் 'மூட்டிய தீயென முடுகிப் பொங்கி', 'என்னெதிர் நிற்காதே ! நின்றால் உன்னைக் கொன்றுவிடுவேன் !' என்று சீற, உத்தமனான விபீஷணன் இலங்கையை விடுத்து, அமைச்சர் நால்வருடன் புறப்பட்டு, வானர சைனியங்கள் தங்கியுள்ள பாசறையை அடைந்தான் என்பதை, கம்பநாடன் கவிதையைத் தொடர்ந்து, நேற்றைய தினம் கதையில் கண்டோம். இன்றைய தினம் கதையில்...*

**'அறந் தலை நிற்பவர்க் கன்பு பூண்டனேன்,**
**மறந்து நின் புகழலால் வாழ்வு வேண்டலேன் ;**

**பிறந்த வென்றுறுதி நீ பிடிக்கலாயெனு**
**துறந்தனன், இனிச் செயல் சொல்லுவீர்!' என்றான்.**

*என்று விபீஷணன்...........*

* * *

## பின் காட்சி 3

*[திரைக்குப் பின்னிருந்து இரண்டு குரல்கள் தான் இந்தக் காட்சியில் பேசுகின்றன. இரண்டாவது குரல் பேசும்போது, முதற்காட்சி மேடையின் பின் புறத்திலே தோன்றுகிறது]*

ஒரு குரல்

*இது அகில இந்திய ரேடியோ நிலையம். நாட்டரசன் கோட்டையில் இன்று விமரிசையாகக் கொண்டாடப் பெறும் கம்பன் திருநாளில், சிறந்த பிரசங்கங்கள் நடைபெற்றன. விபீஷணனைக் கம்பன் வருணித்த முறையைப் பற்றிய பிரசங்கம் ஒன்று முடிவடைந்து வருகிறது. கேட்பீர்கள்.*

இன்னொரு குரல்

*ஆகவே, விபீஷணன் ஓர் அற்புதமான சிருஷ்டி. மனிதனுடைய இதயத்திலே, கேட்டோ கேளாமலோ, எப்போதும் ஒலித்துவரும் கடவுள்-நீதியின் இசையோடு இசையாய்த் தன் வாழ்க்கையை அமைக்க முற்பட்டு, சாதாரண மனிதனை விலங்கிடும் குறுகிய இலட்சியங்களை உதறி எறிந்த மகத்தான தீரனுடைய சித்திரம் அது.*

*தமிழனும், தமிழனுடைய இலட்சிய வேகமும் உள்ள வரையில், இந்தச் சித்திரம் அழியாது. இதை*

*வரைந்த கம்பனுடைய புகழும் மங்காது. கவிஞனுக்குச் சாவு ஏது? ஆயிரம் வருஷங்களுக்கு மேலாகிவிட்டன, கம்பன் என்ற மானிடன் நம்மிடையிருந்து மறைந்து. ஆனால் அவன் காவியமும், அது சித்திரிக்கும் மகோன்னதமான இலட்சியங்களும் இன்னும் உயிருடன் உலாவி வருகின்றன. தமிழ் உள்ள வரையில் அவன் காவியம் நிலைத்து நிற்கும். அவன் அமரன்.*

[கரகோஷம்]

ஒரு குரல்

*கம்பன், வாழ்க!*

பல குரல்கள்

*வாழ்க, வாழ்க!*

[ *திரை* ]

*இந்நாடகத்தில் வரும் பாடல்களைப்*
*பின்கண்ட முறைகளில் பாடலாம் :*

1. ‘ நந்த நந்த ’ - *வசந்தா, ஆதிதாளம் (அரை இடம்)*
2. ‘ நெடு வெண் ’ - *சங்கராபரணம் - விருத்தம்*
3. ‘ ஓங்காநின்ற ’ - „ „ „
4. ‘ வண்ண மாலை ’ - *சங்கராபரணம், ரூபகம் (அரை இடம்)*
5. ‘ அசையாத சிந்தை ’ - *காம்போதி, ஆதிதாளம்*
6. ‘ காதங்கள் கோடி ’ - *காம்போதி, ஆதிதாளம்*
7. ‘ சரணெனக்கு ’ - *தோடி, ஜம்பை*
8. ‘ உலகம் யாவையும் ’ - *நாட்டை, ஆதிதாளம் (அரை இடம்)*
9. ‘ மானினம் ’ - *ஆனந்த பைரவி, ஜம்பை (அரை இடம்)*
10. ‘ ஆரடா சிரித்தாய் ’, ‘ பிளந்தது தூணும் ’ - *மோகனம், ஜம்பை (அரை இடம்)*
11. ‘ அறந்தலை ’ - *நாட்டை, விருத்தம்.*